REG. NO. M. 1823. 16 பக்கங்கள். [illegible] WEEKLY. 2

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5—0—0
ஆறு மாதம் 3—0—0
ஸிலோன், ரூ. 6—0—0
பர்மா மலாய் முதலிய வெளிநாடு ஞ1-க்கு ரூ. 7—0—0

# குமரன்

[illegible]

(மாதப்பதிப்பும் சேர்ந்தது.)

வியாழன் தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY.

ஆசிரியர்:— சொ. முருகப்பா.

ஆரம் 15. காரைக்குடி, ஈஸ்வர-ஞூ கார்த்திகைமீ 17உ (2—12—37) முத்து 16.

# இந்தியாவில் விமானப் படையெடுப்பு

## இந்தியா கவர்ன்மெண்டின் திட்டம்

### பரீக்ஷார்த்த முறை ஆரம்பம்

புதியடில்லி, நவ 23—

இந்தியா கவர்ன்மெண்டார் மாகாண கவர்ன்மெண்டுகளுடன் சேர்ந்து விமானப்படையெடுப்புக்கெதிராக தேசமெங்கும் பாதுகாப்புண்டு பண்ணுவதுபற்றிப் பரிசீலனை செய்ய விருப்பதில், கராச்சியில் ஒவ்வொரு கட்டிடத்திலும் ஒரு அறையில் விஷக்காற்று செல்லக்கூடாத ஒருதனி அறையை யேற்படுத்துவதெனச் சமீபத்தில் செய்த முடிவும் சேர்ந்திருக்கிறது. இயற்கை அமைப்பு காரணமாக விமான படையெடுப்புக்குப் பாத்திரமாகக் கூடிய எல்லா தேசங்களுக்கும், விமானப்படை யெடுப்புக்கெதிரான பாதுகாப்பு முறைகள் அனுஷ்டிக்கப்பட வேண்டுவது அவசியமாகிறது. இந்தியாவில் அத்தகைய ஆபத்திற்கிட மிருப்பதால் பாதுகாப்பு முறைகளை எவ்வளவு சீக்கிரத்தில் ஆரம்பிக்கிறோமோ அவ்வளவும் நல்லது தான் என்று கூறப்படுகிறது.

இப்பொழுது உத்தேசிக்கப்பட்டுள்ள திட்டம் ஒரு இன்ஷியூரன்ஸ் பாலிஸி போன்றே இருக்கிறது. எதிரிகளுடைய விமானங்கள் வருவதை காலத்தில் அறிவிக்க இதைக்கவனிக்கும் ஒரு கோஷ்டியினர் ஏற்படுத்தப்படுவார்கள். எதிரி விமானங்கள் அறியக்கூடாதவாறு தெருவிளக்குகள் எரிவதில் வரையறை யேற்படுத்த வேண்டியிருக்கிறது. தீப்பற்றி எரியும்படி வெடிகுண்டுகள், விஷக்காற்று குண்டுகள் முதலியன எறியப்படுமாயின் அதினின்று பாதுகாப்புண்டு பண்ண முயலப்படும். தீ அணைக்கும் கோஷ்டியினருக்குத் தேர்ச்சியளிக்கப்படும். தப்புவிக்கும் கோஷ்டியினர் ஏற்படுத்தப்படுவார்கள். விஷக்காற்று பாவாத இடமேற்படுத்தப்படும். விமானத் தாக்குதலினின்று சமாளிக்கக்கூடிய கட்டிடங்களைப் பார்த்து முதலில் அவற்றை ஏற்பாடு செய்வதும் ஒரு முறையாகக் கையாளப்படும்.

வசதியுள்ள இடங்களில் பிரதம சிகித்சை ஏற்பாடுகள் செய்யப்பட வேண்டும், வேண்டிய ஜலம், மின்சார வசதி முதலியன வைக்கப்படும். ஆபத்தைத் தவிர்ப்பது, பிரதம சிகித்சை, அதிகாரிகளுடன் சேர்ந்து ஒத்துழைப்பது முதலிய விஷயங்களில் பொது ஜனங்களுக்கு அறிவேற்படுத்தப்படும். இத்தகைய பாதுகாப்பு முறைகள் கையாளப்படும் தேசங்களில் ஜனங்கள் முனிசிபல் சபைகளுடன் ஒத்துழைக்கும் அவசியத்தை நன்குணர்ந்திருக்கின்றனர். இத்தகைய ஒத்துழைப்பில் நன்மை பயக்கும் அனுபவங்கள் பல ஏற்பட்டிருக்கின்றன. இதனல் விமானப் படையெடுப்பின் ஆபத்து வெகுதூரம் குறைக்கப்பட்டிருப்பதாகக் கருதப்படுகிறது. இந்தியாவின் இயற்கை அமைப்பு விஸ்தீர்ணம் காரணமாக இதன் பெரும் பாகம் விமானத் தாக்குதலிலிருந்து சாவதானமாகவிருக்கக்கூடுமென்று எதிர்பார்க்கப்படுகிறது. பெரிய யுத்தமேற்படும் பக்ஷத்தில் துறைமுகங்களிலும் முக்கியமான உள் பிரதேசங்களிலும் வெடி குண்டுகள் போடப்படலாம். இவ்விதம் தாக்கப்படக்கூடிய நகரங்களில் விளக்குகள் வைப்பதில் தடை யேற்படுத்தப்பட வேண்டும். மற்றும் விமானங்கள் செல்லக்கூடிய வழியிலும் இவ்விதம் விளக்குகள் அதிகம் வைக்கக்கூடாது. இப்பொழுது இந்திய கவர்ன்மெண்டார் என்ன பாதுகாப்புண்டுபண்ணுவதென யோசிப்பார்களாயின் அதற்குக் காரணம் இப்பொழுது திடீரென ஆபத்தெதுவுமேற்பட்டதல்ல. இப்பொழுது உலகமுள்ள நிலைமையில் யுத்தமேதாகிலும் ஏற்படுமாயின் அது திடீரென எதிர்பாராத வண்ணம் ஏற்பட்டுவிடுமென்பதே இதில் கவர்ன்மெண்டின் கருத்தாகும்.

#### மத்திய, மாகாண கவர்ன்மெண்டுகள் பொறுப்பு.

மத்திய கவர்ன்மெண்டு, மாகாண கவர்ன்மெண்டுகள் சமஸ்தானங்கள் முனிஸிபல் சபைகள் [illegible] பொறுப்புகளை உத்தேசித்து இத்திட்டத்தைப் பரிசீலனை செய்யச் சம்பந்தப்பட்ட கவர்ன்மெண்டு இலாகாக்களடங்கிய கமிட்டியொன்று நியமிக்கப்படும். தாக்கப்படும் பிரதேசத்திற்கு [illegible]கப் பாதுகாப்பு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படுமெனத் தெரிகிறது. உதாரணமாகக் கடலோரம் அநேகமுள்ள தென்னிந்தியாவை ஒரு விதமாகப் பாவிக்க வேண்டும். பார்லைனம் [illegible] முள்ள வட இந்தியாவை ஒரு விதமாகப் பாவிக்க வேண்டும். இன்னும் திட்டமாக ஒரு நடவடிக்கை யெடுத்துக் கொள்ளப் படாவிடினும் இந்திய சுதேச சமஸ்தானங்கள் இத்திட்டத்தில் கலந்து கொள்ளுமெனத் தெரிகிறது. முக்கியக் கடலோர சமஸ்தானங்களான திருவாங்கூர், கொச்சி, மேற்கிந்திய சமஸ்தானங்கள் முதலியன இதில் கலந்து கொள்ளுமெனத் தெரிகிறது.

இதில் முதல் நடவடிக்கை பலவேறு தேசங்களுக்குள்ளாக ஒரு ஒத்துழைப்பு ஏற்படுத்துவதேயாகும். மேல்நாடுகளில்போல் விமான எதிர்ப்பு ஏற்பட்டால் என்ன செய்வதென்பது பற்றி ஜனங்களுக்கு தேர்ச்சியளிக்கப்படும். பிரான்ஸில் விமான குண்டிலிருந்து தப்பித்துக் கொள்ளக்கூடிய அறை எங்கிருக்கிறதென்பது ஒவ்வொரு வீட்டிலும் ஒரு நோட்டீஸ் மூலம் அறிவிக்கப்படுகிறது. இந்தியாவிலும் கடலோர நகரங்களிலும் மற்றும் முக்கியப் பிரதேசங்களிலும் இத்தகைய நடவடிக்கையெடுக்க வேண்டியது அவசியமாகும். இதற்கு அடுத்தபடி நடவடிக்கை யெடுக்கும் பொழுது ஒவ்வொருவருக்கும் விஷக் காற்றைத் தவிர்க்கும் முகமூடி இருக்கும்படி செய்யப்படும். அத்துடன் அதை இந்நாட்டிலேயே உற்பத்தி செய்யக் கவனஞ் செலுத்தப்படும்.

## பம்பாயில் ஆராய்ச்சி வேலைக்கு ஏற்பாடு

பம்பாய், நவ. 24--

கைத் தொழில்களின் அபிவிருத்திக்கு உதவிசெய்ய உத்தேசித்து, ஆராய்ச்சி வேலையை நடத்துவதற்காக பம்பாயில் ரசாயன தொழிற்சாலையையும், ஆராய்ச்சி சாலையையும் ஸ்தாபிக்க பம்பாய் சர்க்கார் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது. கதர், கம்பளித் தொழிலின் அபிவிருத்திக்காக அகில இந்திய நூற்போர் சங்கத்துக்கு சர்க்கார் 29,000 ரூபாய் அளித்திருக்கின்றனர். வெல்ல உற்பத்தி, காகிதத் தொழில் முதலியவற்றின் அபிவிருத்தியை முன்னிட்டு அகில இந்திய கிராமக் கைத்தொழிற் சங்கத்துக்கு சர்க்கார் 8000 ரூபாய் அளித்திருக்கின்றனர். தோல் பதனிடும் கைத்தொழிலை ஆதரிப்பதற்காக சர்க்கார் 14,000 ரூபாய் சாங்க்ஷன் செய்திருக்கின்றனர்.

---

### நெற்குப்பை பஞ்சாயத்து போர்டு நிர்வாகம்

வரி கொடுப்போர் கண்டனம்

நெற்குப்பை, நவம்பர் 25—

நேற்று இரவு 7-30 மணியளவில் இவ்வூர் காங்கிரஸ் மாளிகையில் இவ்வூர்ப் பஞ்சாயத்து போர்டு சம்பந்தமாக திரு அரு. வி. ராம. சிவலிங்கம் செட்டியார் அவர்கள் தலைமையின்பால் வரி கொடுப்போர் சங்கத்தின் சார்பாக வரி கொடுப்போரின் பொதுக்கூட்ட மொன்று நடைபெற்றது. அவ்வமயம் திரு எம். பொன்னையா பிள்ளை அவர்கள், பிரஸ்தாப பஞ்சாயத்து போர்டு வார்டு பிரிவினையில்லாதிருக்கிற தென்றும் வார்டு பிரிவினை செய்து தேர்தல் நடாத்தினால் நியாயமான பிரதிநிதித்துவம் கிடைப்பதோடு, நிர்வாகத் திறமையுள்ளவர்கள் அங்கத்தினராய் வருதற்கு சந்தர்ப்பம் கிடைக்குமென்றும் கூறினார்கள். பின்னர், திரு எம். மாணிக்கம் அவர்கள் பேசும்போது, இவ்வூர் பஞ்சாயத்து போர்டு விஸ்தீரணம் 5000 ஜனத்தொகையையும் சுமார் 1000 வோட்டர்களையும் கொண்டதாயிருந்தும் வார்டு பிரிவினையில்லாது எலக்ஷன் நடாத்திப் போர்டு அமைத்திருப்பது கண்டிக்கத் தக்கதென்றும் இப்போதைய போர்டில் நிர்வாக ஊழல் மலிந்து விட்டதென்றும் அதிலிருந்த 11 அங்கத்தினர்களில் 5 அங்கத்தினர்கள் ராஜினாமா செய்து கொண்டதும் ஒரு அங்கத்தினர் கூட்டங்களுக்கு வாராது தன்னுடைய ஸ்தானத்தை யிழந்ததுமே இதற்கு அத்தாட்சியாகுமென்றும் பெருமான் என்னும் ஒருவரை ஒரு மாதத்திற்கு லீவு எழுதி வாங்கிக் கொண்டு, லீவு முடிந்ததும் அவரை வேலையில் சேர்த்துக் கொள்ளாது தமக்கு வேண்டிய மற்றொருவரை அப்பதவியில் அமர்த்திக் கொண்டிருப்பது பிரசிடெண்டின் சூழ்ச்சி என்றும் இன்னுமிப்படியுள்ள பல விஷயங்களை எடுத்துக் காட்டியும் கூடிய விரைவில் வார்டு பிரிவினை செய்து எலக்ஷன் நடாத்துமாறும் அங்ஙனம் செய்வதற்குத் தாமதமாகுமானால் அதுவரையில் ஓர் ஸ்பெஷல் ஆபீசரிடம் நிர்வாகப் பொறுப்பை ஒப்படைத்து, இவ்வூர் மக்களின் கண்ணியத்தைக் காப்பாற்றுமாறு சர்க்காரை வேண்டிக்கொள்வதாயும் இனிவரும் தேர்தல்களில் ஏதாவது பிரதிப் பிரயோசனத்துக்காக போர்டை மூன்று வருடங்களுக்குக் குத்தகை விடவேண்டாமென்றும் கூறினர். பின்னர் குறிப்பிட்ட விஷயமாய்ப் பல தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறின. திரு. ராம. லெ. ராம. ராம. ராமனுதன் செட்டியாரவர்கள் தனக்கு போர்டுமீதுள்ள அதிருப்தி காரணமாக ராஜினாமாச்செய்து கொண்டதைச் சபையார் பாராட்டினர். வந்தனோபசாரம் கூறித் தேசிய கீதம்பாடி கூட்டம் 9 மணியளவில் இனிதேகலைந்தது.

---

### படக்காட்சிகளை மாற்றிக்கொள்ள

ஜேர்மன்-ஜப்பான் ஒப்பந்தம்

ஜெர்மனியில் தயாரிக்கப்படும் படங்களை ஜப்பானுக்கும், ஜப்பானில் சிருஷ்டியாகும் படங்களை ஜெர்மனிக்கும் மாற்றிக்கொள்வதற்காக ஓர் ஒப்பந்தம் செய்யப்பட்டுளது. பொது உடமை வாடையை விரட்ட இங்ஙனம்செய்யப்படுகிறதென்று நம்பப்படுகிறது.







## அக்டோபர் ரப்பர் ஏற்றுமதி

சிங்கப்பூர் நவ 25—

அக்டோபர் மாதத்தில் மலாயாவிலிருந்து ஏற்றுமதியான உலர்ந்த ரப்பர் மொத்தம் 36,925 டன்னென்று ரப்பர் கண்ட்ரோலர் கூறுகிறார். இந்தஏற்றுமதி 37,000 டன்னாயிருக்குமென இம்மாத ஆரம்பத்தில் மதிப்பிடப்பட்டது.

அக்டோபர் மாதக் கடைசியில் மலாயாவின் ஏற்றுமதியையும் கோட்டாவையும் ஒப்பிட்டு, 1936ம் வருடத்திலிருந்து கழித்துக் கொண்டு வரப்பட்ட பாக்கியையும் சேர்த்துக் கணக்கிட்டுப் பார்த்தால், ஏற்றுமதியானது கோட்டாவை விட 6,096 டன் குறைந்திருக்கிறது.

---

### தேயிலைக்கும் ரப்பருக்கும் புதிய தீர்வை.

தோட்ட வேலைகளுக்குச் சிங்களத்தொழிலாளிகளைத் திரட்ட சிலோன்சர்க்கார் பணச் செலவு செய்ய வேண்டியிருக்கிறது. இந்தச் செலவை தேயிலைக்கும் ரப்பருக்கும் ஒரு ஏற்றுமதி வரி விதித்து அந்த வரிப்பணத்திலிருந்து சரிக்கட்டிக் கொள்ளலாமென்று நேற்று நடந்த தொழில் வர்த்தகக் கமிட்டிக் கூட்டத்தில் சிபார்சு செய்யப்பட்டது. அந்தச் சிபார்சின்படி தேயிலைக்கும் ரப்பருக்கும் புதியதொரு ஏற்றுமதி வரியை விதிக்க ஒரு திட்டத்தைத்தயாரிக்குமாறுலேபர்கண்ட்ரோலர் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கிறார்.

இந்தியத் தொழிலாளிகளைத் திரட்டி வரும் விஷயம் அரசாங்க சபையில் விவாதிக்கப்பட்டபொழுது இமிகிரேஷன் நிதியிலிருந்து ஒரு பகுதியையும், சர்க்காரிடமிருந்து ஒரு மான்யத்தையும் வாங்கி சிங்களத் தொழிலாளிகளைத் திரட்டச் செலவிடலாமென்று யோசனை கூறப்பட்டதாம். ஆனால் இந்த யோசனைக்கு இமிகிரேஷன் போர்டு இணங்கவில்லையென்று தெரிகிறது. புதிய தொழிலாளிகளை இலங்கைக்கு அனுப்புவதில்லையென்று செய்த முடிவை இந்திய சர்க்கார் இன்னமும் மாற்றிக்கொள்ளவில்லையாதலால் சிங்களத் தொழிலாளிகளைச் சுறுசுறுப்புடன் திரட்ட வேண்டுமென்று தொழில் கமிட்டியார் கருதுவதாகத் தெரிகிறது.

---

### பினங்கு நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கம்

நாளது ஐப்பசி மாதம் 30உ மாலை 5 மணிக்கு சங்கக் கட்டிடத்தில் 4-வது வருட 6-வது நிர்வாக சபைக் கூட்டம் தலைவர் திரு. க. அழ. ராம. அருணசலம் செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 13 அங்கத்தினர் விஜயம்செய்திருந்தனர். நான்காவது வருட ஐந்தாவது நிர்வாக சபைக்கூட்ட நடவடிக்கை விவரம் வாசித்துக் காண்பிக்கப்பெற்றது. ஐப்பசி மாதம் 1உ முதல் 30உ வரையிலுள்ள சங்க வரவு செலவு கணக்குகள் வாசித்து காண்பிக்கப்பெற்று, ஒப்புக்கொள்ளப்பெற்றது. சகோதர சங்கங்களிலிருந்தும், இதர காரியாலயங்களிலிருந்தும் வந்துள்ள கடிதங்கள், அறிக்கைகள் முதலியன வாசித்துக் காண்பிக்கப்பெற்று ரிக்கார்டு செய்யப்பெற்றது. செட்டிநாடு பயோனியர் பாங்க் திரு. மு. அ. பழனியப்ப செட்டியார் அவர்களால் 7-11-37 ல் எழுதியனுப்பப் பெற்று வந்த கடிதம் வாசித்துக்காண்பிக்கப்பெற்று, ரிக்கார்டு செய்யப் பெற்றதுடன்; அதை நம்மவர்கள் ஆதரிப்பதென தீர்மானிக்கப்பெற்றது. கோலாலம்பூர் மத்திய இந்திய சங்கத்திலிருந்து வந்த எல்லாக் கடிதங்களும் வாசித்துக் காண்பிக்கப்பெற்று, அதில் கண்டுள்ள சீன கஷ்ட நிவாரண நிதிக்கு நம் சங்கச் சார்பில் நி. 25. நன்கொடையாக அனுப்பிவைப்பதென தீர்மானிக்கப்பெற்றது. கோலப்பிரை செயின்ட் மார்க்ஸ் ஸ்கூல் கட்டிட நிதிவிஷயமாக 4-11-37-ல் வந்த கடிதம் வாசித்துக் காண்பிக்கப்பெற்று, அவர்கள் அதிகாரம்பெற்ற திரு. சி. அமிர்தநாயகம் பிள்ளைவசம் நமது சங்க அங்கத்தினர்கள் கொடுத்திருக்கும் தொகையை பெற்றுக்கொள்ளும்படி தெரிவிப்பதென தீர்மானிக்கப்பெற்றது. சங்கக் கிராணியாருக்கு மார்கழி மீ 1உ முதற் கொண்டு நி. 40. வீதம் சம்பளம் கொடுத்து வருவதென தீர்மானிக்கப்பெற்றது. காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறப்பெற்று, இரவு 6-30 மணிக்கு கூட்டம் இனிது முடிவெய்தியது.



## அமெரிக்காவில் மகாத்மா சக்தி

### ஆட்டுப் பாலுக்கும் அரை ஆடைக்கும் வோட்டு வெற்றி

ஸீடில் பிரதேசத்து மேயர் பதவிக்கு ஒரு அபேக்ஷகராய் நின்ற திரு. வி. ஏ. மேயர்ஸ் காந்திஜியைப் போல் கதர்த்துணி உடுத்து காலில் செருப்பு அணிந்து ஒரு வெள்ளாட்டைக் கையில் பிடித்துக் கொண்டு எலக்ஷன் பிரசாரம் செய்தார். நிபல் ஹோட்டலுக்குள் சென்று தனக்கு ஆட்டுப் பாலும் சிகப்பு முள்ளங்கியுமே இவருக்கு தேவை என்று வற்புறுத்திக் கேட்டு சாப்பிட்டார். இந்த எலக்ஷனில் நின்ற பத்துப் பேரில் 6 வதாக ஓட் கிடைத்தது.

அடுத்த தடவை ஒரே மூச்சாக லெப்டினென்ட் கவர்னர் பதவிக்கு அபேக்ஷகராக நின்றார். எல்லோரும் நகைத்தனர் மேயர்ஸ் தன் நாடகத்தை நடித்தார் எங்கு பார்த்தாலும் அவர் பேச்சு தான் எலக்ஷனும் நடந்தது.

மொத்த ஓட்டில் மூன்றிலிரண்டு பங்கு மேயர்ஸுக்கே கிடைத்து அவரும் வாஷிங்டனுக்கு லெப்டினென்ட் கவர்னரானார். மகாத்மா வேஷத்தின் மஹிமைதானென்னே!

---

### தாழ்த்தப்பட்டவர் தனி ஹாஸ்டல் ஒழிப்பு

கல்கத்தா ஸிண்டிகேட் தீர்மானம்

கல்கத்தா, நவ. 27—

தாழ்த்தப்பட்ட மாணவர்களுக்கு என்று தனியாக ஹாஸ்டல் வைத்திருக்கும் பழக்கத்தை ரத்துசெய்வது என்று கல்கத்தா சர்வகலாசாலை ஸிண்டிகேட் தீர்மானித்திருக்கிறது.

1938-39-ல் தாழ்த்தப்பட்ட மாணவர்கள் மாதம் ரூ 4 கொடுத்து ஹாஸ்டலில் வசிக்க முடியும்.

இதற்காக ஒவ்வொரு காலேஜிலும் அப்படிப்பட்ட மாணவர்களுக்கு ஸ்தானம் ரிஸர்வ் செய்யும்படி பிரின்ஸிபால்களுக்கு ஆலோசனை கூறப்பட்டிருக்கிறது. 75 மாணவர்களுக்கு இவ்வருஷத்தில் ஷை வசதியளிப்பதென்று அதற்காக ரூ. 3000 ஒதுக்கப்பட்டிருக்கிறது.

---

### தமிழ் முரசு தினசரி

சிங்கப்பூரிலிருந்து இப்போது வாரம் மும்முறையாக வெளிவரும் "தமிழ் முரசு" பத்திரிகை டிசம்பர் 1உயிலிருந்து தினசரியாக வெளிவருமென்று தெரிகிறது. ஏற்கனவே கோலாலம்பூரிலுள்ள "தமிழ் நேசன்" பத்திரிகை தினசரியாகும். பினங்கில் "தேச நேசன்" வாரப் பத்திரிகை யொன்று நடைபெற்றுவருகிறது.

## 'வின்ஸர் தம்பதிகள்' வேஷம்!

### பாரிஸ் ஹோட்டலில் நடந்த திருவிளையாடல்

### எங்கும் ராஜோபசாரம்

### முடிவில் கைது செய்யப்பட்டனர்

வின்ஸர் கோமகன் தம்பதிகள் போன்று வேஷமணிந்து பிரான்ஸ் போலீசார் முதல் எல்லோரையும் ஏமாற்றிவிட்டு தற்போது கைதியாகியுள்ள இரு தம்பதிகளின் திருவிளையாடல்களை யொட்டி, சர்க்கார் வட்டாரங்களில் வெகு ரகசியமாக வைக்கப்பட்டிருந்தது. தற்போது அதையொட்டி கீழ்க்கண்ட ருசிகரமான விபரங்கள் வெளிவந்திருக்கின்றன;—

பாரிஸில் பிரசித்தி பெற்றதொரு ஹோட்டலில் சென்ற அக்டோபர் மாதம் இக்கதை ஆரம்பமாகிறது. ஒரு நூற்றாண்டு காலமாக அரச குடும்பத்தினர்கள் வந்து தங்கிச்செல்லும்படியான மகத்தான பாக்கியம்பெற்ற இந்த ஹோட்டலுக்கு வியன்னாவிலிருந்து ஒரு நாள், வின்ஸர் கோமகனும், கோமகளும் பிரான்ஸுக்கு 'இன்காக்னிடோ' என்ற கப்பலில் வரப்போவதாயும், அவருக்கு மேற்படி ஹோட்டலில் நல்ல அறைகளை ரிசர்வ் செய்து வைக்கும்படியும் ஒரு டெலிபோன் செய்தி கிடைத்தது. அதற்கு மேல் கேட்கவும் வேண்டுமா? அதற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் வெகு ஒழுங்காகவும் ஜரூராகவும் செய்யப்பட்டன. அத்துடன் விஷயம் போலீசாருக்கும் அறிவிக்கப்பட்டது. அவர்கள் இதர சர்க்கார் இலாகாக்களுக்கெல்லாம் இதைத் தெரியப்படுத்தினார்கள்.

அரச குடும்பத்தினர் ஏறி வருவதாகக் கருதப்பட்ட ரயிலும் வந்து சேர்ந்துவிட்டது. வின்ஸர் தம்பதிகள் போன்ற சாயலுள்ள தம்பதிகள் ஒய்யாரமாக கீழே இறங்கினர். பிரஞ்சு அன்னிய நாட்டு மந்திரி காரியாலயத்திலிருந்து வந்திருந்த சர்க்கார் பிரதிநிதி அவர்களை மரியாதையாக வரவேற்றார்.

ஹோட்டலில் வந்தவர்களை, அரச குடும்பங்களை வரவேற்கும் தோரணையில் மிகுந்த மரியாதையுடனும் ராஜோபசாரத்துடனும் வரவேற்கப்பட்டு ஹோட்டலில் அவர்களுக்காக ஒதுக்கப்பட்டிருக்கும் அறைகளுக்கு அழைத்துச் செல்லப்பட்டது. இத்துடன் அரச குடும்பத்திற்கு மரியாதைக்கு அறிகுறியாக 3 நாள் இராப்பகலாய் அவர்கள் அறைக்கு வெளியே ஒரு காவலாளும் நியமிக்கப்பட்டது.

#### கம்பி நீட்டினர்

இவ்வளவு வைபவங்களுடனும் சுக போகங்களை அனுபவித்து வந்த "வின்ஸர் தம்பதிகள்" ஒருநாள் ஒருவரிடமும் சொல்லிக்கொள்ளாமலும், ஹோட்டலுக்குச் செலுத்தவேண்டிய பணத்தில் ஒரு செல்லாத காசேனும் செலுத்தாமலே ஹோட்டலை விட்டுப்போய் விட்டனர். அதன் பிறகுதான் ஹோட்டல் நிர்வாகிகளுக்கு துணிகரமான இந்த சாகசத்தின் உண்மை வெளிப்பட்டது.

#### பூர்வோத்திரம்

ஹோட்டலுக்கு வந்திருந்த 'கோமகனும்' 'கோமகளும்' பிரான்ஸ் போலீசாருக்கு வெகு நன்றாகத் தெரிந்தவர்களென்றும், சிறிது காலத்திற்கு முன் இந்த தம்பதிகள் பலவித ஹாஸ்யச் செய்கைகள்மூலம் ஜீவனம் நடத்தி வந்தார்களென்றும் அத்துடன் இருவருக்கும் நாடகமேடைப் பரிச்சயமும் உண்டென்றும், பின்னர் அவர்கள் இருவரும் வின்ஸர் தம்பதிகள்போன்று நடிப்பதற்கு வெகு கணக்காப் பழகிக் கொண்டுவந்து அதில் விசேஷத்தேர்ச்சி பெற்றிருப்பதாகவும் கூறப்படுகிறது.

இதுமட்டுமா? சென்ற 3 மாதகாலத்தில் இவர்கள் இத்தாலி, ஆஸ்திரியா முதலிய விடங்களிலும் வின்ஸர் தம்பதிகள் போன்று நடித்து பல சந்தர்ப்பங்களில் உண்மையான வின்ஸர் தம்பதிகள் அடையவேண்டிய மரியாதையையும் உபசாரத்தையும் அடைந்திருப்பதாகவும் சொல்லப்படுகிறது.

#### கைதியாயினர்

இந்த மாயதம்பதிகள் இருவரும் தற்போது போலீசார் வசம் இருந்து வருகின்றனர். அவர்கள்மீது மேற்கண்ட விதம் ஏமாற்றியதாக குற்றஞ் சாட்டப்பட்டிருக்கிறது. இவர்களில் புருஷன் அமெரிக்கர் என்றும், மனைவி இங்கிலீஷ்காரி யென்றும் தெரியவருகிறது.

#### இத்தாலியில் நடந்த கூத்து

இவ்வருட ஆரம்பத்தில் இதே தம்பதிகள், இதேமாதிரி குற்றத்திற்காக இத்தாலி போலீசாரால் கைதுசெய்யப்பட்டு, கடைசியில் அந்நாட்டைவிட்டே வெளியேற்றப்பட்டனராம். இத்தாலியில் இவர்கள் செய்த திருவிளையாடலால் வருத்தமடைந்த வின்ஸர் கோமகனுலேயே செய்துகொள்ளப்பட்ட புகாரின் மீதுதான் இத்தாலியிலும் இவர்கள் கைது செய்யப்பட்டனராம்.

## பிரிக்கப்பட்ட ஜில்லா போர்டுகள்

பிரிக்கப்பட்டுள்ள ஜில்லா போர்டுகளில் நியமன ஸ்தானங்களுக்குப் பதிலாக மைனாரிட்டி வகுப்புகளில் எந்தெந்த வகுப்புக்குப் பிரதிநிதித்வம் இல்லையோ அவற்றிற்குப் பிரதிநிதித்வம் அளித்து அங்கத்தினரைச் சேர்த்துக்கொள்ள ஜில்லா போர்டுகளுக்கு சென்னை சர்க்கார் நவம்பர் 23உயன்று உத்தரவு பிறப்பித்திருக்கின்றனர்.

அதன்படி வடக்கு இராமநாதபுரம் ஜில்லாபோர்டு மெம்பர்களால் ஒரு ஆதித்திராவிட மெம்பரை தேர்ந்தெடுத்துக்கொள்ள உரிமையளிக்கப்பட்டிருக்கிறது. இதேபோன்று தென்இராமநாதபுரம்ஜில்லா போர்டுக்கு ஒரு முஸ்லிம் மெம்பர் ஸ்தானமும், அளிக்கப்பட்டிருக்கிறது.

மேற்கண்ட வகுப்புப் பிரதிநிதி டிஸம்பர் மீ 15உக்குள் அங்கத்தினர்களால் தெரிந்தெடுக்கப்படவேண்டும்.

இப்பொழுது தேர்தல்மூலம்வந்திருக்கிற அங்கத்தினர் தொகையும்,சேர்த்துக் கொள்ளப்படும் அங்கத்தினர் தொகையும் சேர்ந்து எவ்வளவு ஆகிறதோ அதுதான் சர்க்காரால் அனுமதிக்கப்பட்டுள்ள (ஜில்லா போர்டுகளின்) மொத்த அங்கத்தினர் தொகையாகும்.

---

### அன்னாசிப்பழ ஏற்றுமதி

நவம்பர் 6ந் தேதியோடு முடிவுற்ற வாரத்தில் மலாயத் துறைமுகத்திலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட அன்னாசிப்பழம் மொத்தம் 20969 பெட்டிகள். அதில் 12,360 பெட்டிகள் பிரிட்டனுக்கும், 23,387 பெட்டிகள் ஐரோப்பாக் கண்டத்திற்கும் 3,478 பெட்டிகள் கானடாவிற்கும், 2,744 பெட்டிகள் இதர இடங்களுக்கும் அனுப்பப்பட்டன.

1336 டிசம்பர் 27 முதல் 1937நவம்பர் 6 வரை மொத்த ஏற்றுமதி 2,262,903 பெட்டிகள். அல்லது வாரமொன்றுக்குச் சராசரி 50,287 பெட்டிகள்.

1936-ம் வருடத்தில் இதே காலத்திய மொத்த ஏற்றுமதி 2,166,196 பெட்டிகள், அல்லது வாரமொன்றுக்குச் சராசரி 48,128 பெட்டிகள்.

## கௌரவ மாஜிஸ்திரேட்டுகள்

### ஜனவரிமாத முதல் கிடையாது

பம்பாய், நவ 27—

பம்பாய் நகரத்தில் தவிர பம்பாய் மாகாணத்திலிருக்கும் கௌரவ மாஜிஸ்திரேட்டுகளை 1938-ம் வருஷம் ஜனவரி மாத முதல் எடுத்துவிட பம்பாய் ஸர்க்கார் தீர்மானித்திருக்கிறது. இந்தக் கோர்ட்டுகளின் அலுவல்களை முடித்துவிடவும் பாக்கியிருக்கும் விசாரணை நடத்தவும் ஜில்லா மாஜிஸ்திரேட் உத்தரவிடப்பட்டிருக்கிறார்.

### தர்பங்கா மகாராஜாவுக்கு பட்டங்கள்

பாட்னா, நவ 27—

டிசம்பர் மாதத்தில் தர்பங்கா மஹாராஜாதி ராஜாவிற்கு காசி ஹிந்து சர்வகலாசாலையும், அலஹாபாத் சர்வகலாசாலையும் "டாக்டர் அப் லிட்டரேச்சர்" "டாக்டர் அப் லாஸ்" கௌரவப் பட்டங்களை முறையே வழங்கத் தீர்மானித்திருக்கின்றன.

### ஸ்பெயின் சண்டையைப்பற்றி

கல்கத்தா, நவ. 25.

கல்கத்தா சர்வ கலாசாலை உப அத்யக்ஷகர் ஸ்ரீ சியாம பிரசாத முகர்ஜி கூறியதாவது:— ஸ்பெயின் உள்நாட்டுச் சண்டை உண்மையில் ஒரு பலப்பரீட்சை. ஒரு புறம் பாஸிஸம், மற்றொருபுறம் பொதுவுடமை, குடியரசு, இவைகளுக்கிடையே பரீக்ஷை நடக்கிறது. மகாயுத்தத்திற்குப் பிறகு, ஐரோப்பாவில் ஒன்றன்பின் ஒன்றாக நெருக்கடிகள் வந்துகொண்டே இருக்கின்றன. இதில் முக்கியமானது ஸ்பெயின் யுத்தம். பிராங்கோவின் கட்சியில் ஜெர்மெனியர்களும், இத்தாலியர்களுமாகச் சேர்ந்து லட்சத்துப் பத்தாயிரம் பேர்கள் இருக்கிறார்கள். சர்க்கார் கட்சியில் பிரிட்டிஷாரும், பிரெஞ்சு சர்க்காரும், ரஷ்யர்களுமாகச் சேர்ந்து ஐம்பதாயிரம் பேர்கள் இருக்கிறார்கள். ஸ்பெயினைத் தரையில் கிடத்தி அதன் மீது இன்று சர்வதேச யுத்தம் ஒன்று நடத்தப்படுகிறது.

### சுதந்திர தின பிரதிக்ஞை

#### டில்லியில் தடைரத்து

புது டில்லி, நவ. 27.

காங்கிரஸின் சுதந்திரதின பிரதிக்ஞை டில்லியில் தடை செய்யப்பட்டிருந்தது. அதை ரத்து செய்து விட்டதாக பிரதம கமிஷனர் தனக்கு எழுதியிருப்பதாக டில்லி மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ஸ்ரீ ஜவாஹர்லாலிடமிருந்து கடிதம் வந்திருப்பதாகத் தெரிகிறது.

## குட்டி முசோலினி மாண்டார்

### ஸ்பெயின் யுத்தத்தில் சம்பவம்

புருனோ முசோலினி இத்தாலி சர்வாதிகாரியான முசோலினியின் இளைய குமாரர். அவர் ஸ்பெயினுக்குச் செல்ல தகப்பனார் அனுமதி கேட்டார். அவர் அனுமதிக்கத் தயங்கினார். தாயாரும் விடை கொடுக்க மறுத்தார். ஆனால் குட்டி முசோலினி இவற்றைப் பொருட்படுத்தாமல் ஸ்பெயினுக்குச் சென்றார். பார்ஸிலோனாவில் நடந்த ஆகாய விமான யுத்தத்தில் அவர் இறந்துபோனார். இறந்த செய்தியை இத்தாலிய அரசாங்கம் பலருக்குத் தெரிவிக்கவில்லை.

### பிராங்கோவின் ஏஜண்டு

லண்டனிலிருந்து பின் வரும் செய்தி கிடைத்திருக்கிறது.

ஜெனரல் பிராங்கோவின் பிரதம ஏஜண்டாக லண்டனில் ஆல்பாகோமகன் நியமனம் செய்யப்பட்டிருப்பதை பிரிட்டிஷ் சர்க்கார் ஒப்புக்கொண்டு விட்டார்கள். ஆல்பாகோமனை ராய்ட்டர் பிரதிநிதி பேட்டி கண்டபொழுது அவர் கூறியதாவது:—

பிரிட்டிஷ் சர்க்காருக்கும் தேசீய ஸ்பெயினுக்குமிடையே வர்த்தக உறவு அபிவிருத்தி யடைய வேண்டியது அவசியம். பிராங்கோவின் ஆட்சிக்கு உட்பட்டிருக்கும் தேசீய ஸ்பெயினில் பூரணமான சமாதானம் நிலவுகிறது. ஜனங்கள் அமைதியாக வாழ்கிறார்கள். ஆகவே அவர்கள் தாங்கள் உற்பத்தி செய்யும் சாமான்களை அயல் நாடுகளில் விற்பனை செய்ய விரும்புகிறார்கள். ஸ்பெயினின் மூன்றில் இரண்டு பங்கு பிராங்கோவின் ஆட்சிக்கு உட்பட்டிருக்கிறது. முக்கியமான சுரங்கங்களும் தொழிற்சாலைகளும் எங்களுடைய பிராந்தியத்திலேயே இருக்கின்றன. ஸ்பானிஷ் சுரங்கப் பொருள்கள் பிரிட்டனுக்குத் தேவை. ஸ்பெயினுக்கு பிரிட்டனின் நிலக்கரியும் ஜவுளியும் தேவை.

### பிராமணர்கள் கலப்பு விவாகம்

#### டிசம்பரில் பண்டித பரீக்ஷை

காசி, நவ. 25.

பிராமண சமூகத்திலுள்ள பல உட்பிரிவினர்களுள் நடக்கும் கலப்பு விவாகம் ஹிந்துக்களது தர்ம சாஸ்திரத்திற்கு இணங்கியதுதான் என்று அறிவிப்பதற்காகக் காசியில் டிசம்பர் 23, 24-ந் வ களில் அகில இந்திய வைதீக பண்டிதர்கள் பரீக்ஷை நடைபெற வேண்டுமென்று பண்டித மாளவியா நாள் குறித்திருப்பதாகத் தெரிகிறது.

## ஜமீன் முறை ஒழிக"

### ஜமீன்தார்கள் மகஜர்

பாட்னா, நவ. 29—

நிலச்சுவான்தார்களுக்கு தகுந்த ஈடு கொடுத்துவிட்டு, ஜமீன்தாரி முறையை ஒழித்துவிடும்படி, கயாவைச் சேர்ந்த சுமார் 100 ஜமீன்தார்கள் கையெழுத்திட்டு பீஹார் பிரதம மந்திரிக்கு ஒரு வேண்டுகோள் அனுப்பியிருக்கிறார்கள். குடிகள் ஜமீன்தாரிகளுக்கு விரோதமாய் போய்விட்டார்களென்றும், இருவருக்குமிடையே சமாதானம் ஏற்படுமென்று தோன்றவில்லை யென்றும் அவர்கள் கூறுகிறார்கள். பெரும்பாலான ஜமீன்தார்களுக்கு அந்த பொறுப்பு உபத்திரவத்தை விளைவிக்கும் ஒரு சுமையாய் விட்டதென்றும், ஆகவே அம்முறையை ஒழித்துவிட வேண்டுமென்றும் சொல்லுகிறார்கள்.

### ஒரிஸா ஜமீந்தார் ஒப்பாரி

#### நிலக்குத்தகை திருத்த மசோதா புரட்சிகரமானதாம்

கட்டக், நவ. 29—

நேற்று மாலை தாராகோட் ராஜா சாஹேப் அக்ராசனத்தில் ஒரிஸா ஜமீன்தார்கள் மகாநாடு நடைபெற்றது. பர்த்துவான் இளவரசர் கூட்டத்திற்கு விசேஷமாக அழைக்கப்பட்டிருந்தார். பிரதம மந்திரி ஏ. விசுவநாத தாஸ், வருமான மந்திரி ஸ்ரீ. நித்யானந்த கானுங்கோ விஸிட்டர்கள் என்ற ஹோதாவில் கூட்டத்திற்குச் சென்றிருந்தனர்.

தாராகோட் ராஜா தமது பிரசங்கத்தில் பேசியதின் சாரம்:— "நிலக் குத்தகை சட்டத்திற்குக் கொண்டுவரப்படும் திருத்த மசோதா ஜமீன் உரிமைகள் யாவையும் ரத்து செய்கிறது. இது புரட்சிகரமானது. சர்க்கார் அதிகார வரம்புக்கே மீறியது. விசேஷ அதிகாரத்தை உபயோகிக்கும்படி கவர்னர் ஜெனரலை வேண்டிக்கொண்டனர்.

### ஒன்பது தேச ஒப்பந்தத்தை ஜப்பான் கைவிடும்

டோகியோ. நவ 27—

நேற்று பிரதம மந்திரி பத்திரிகை நிருபர்களிடம் பின் வருமாறு தெரிவித்தார். "அஸாஹீ" என்ற பத்திரிகை கூறுகிறது:—

"ஷாங்கையிலுள்ள சர்வ தேசீய ஸ்தலம் சம்பந்தமாக ஜப்பான் பலாத்கார முறையைக் கையாள நேரக்கூடும். அனேகமாய் மற்ற தாப்பினரின் போக்கைப் பொறுத்திருக்கிறது. அந்நியநாடுகள் ஒன்பது தேச உடன்படிக்கையை ஒரு சாக்காகக்கொண்டு சீன விஷயத்தில் தலையிட்டு வருகின்றன. எனவே ஜப்பான் சரியான சந்தர்ப்பத்தில் ஒன்று அதைத் திருத்தவேண்டுமென வற்புறுத்தும். அல்லது அதை அடியோடு கைவிடக்கூடும்."

## வட ராமனாதபுரம் போர்டு

### போர்டு பியூன்களுக்குக் கதராடை

#### நிறைவேறிய தீர்மானங்கள்

வடராமனாதபுரம் ஜில்லா போர்டு கூட்டம் நவ. 27வ மாலை திருப்பத்தூரில் போர்டு காரியாலயத்தில் கூடியது. ஸ்ரீமான் ஸி. வி. வி. டி. வெங்கிடாசலம் செட்டியார் தலைமை வகித்தார்.

போர்டு, பிராந்தியத்தில் கிராம உத்தியோகஸ்தர்களுக்குப் பரம்பரை உரிமை கொடுப்பதை எடுத்துவிடுவதை ஆதரிப்பதாக திருப்பத்தூர் தாசில்தாருக்கு பதில் அறிவிப்பதென முடிவு செய்தது.

#### விசேஷக்கூட்டம்

சாதாரணக் கூட்டத்துக்கு முன்பு போர்டின் விசேஷக்கூட்டம் நடைபெற்றது. லோகல் பண்டு என்ஜினீயர் ஸ்ரீமான் எஸ். நாராயணஸ்வாமி அய்யரை மேல் தஞ்சைஜில்லா போர்டுக்கு மாற்றி அவர் ஸ்தானத்துக்கு அஸிஸ்டெண்டு என்ஜினீயர் பி. வி. பூனை நியமிப்பது சம்பந்தமாக சர்க்கார் போர்டின் அபிப்பிராயத்தைக்கேட்டிருந்தது. இதுபற்றி விசேஷக் கூட்டம் ஆலோசிக்கையில் ஸ்ரீமான் சிவலிங்கம் சர்க்காரின் யோசனையே போர்டு ஏற்றுக் கொள்ளலாமென ஓர் தீர்மானத்தைப் பிரேரித்தார். கொஞ்ச நேர விவாதத்துக்குப்பின்னர் தீர்மானம் பெருமிதமான ஓட்டுகளால் நிறைவேறியது.

#### சாதாரணக்கூட்டம்

முதலில் கூட்டத்தில் அங்கத்தினர்கள் கேட்டிருந்த கேள்விகளுக்குத் தலைவர் பதிலளித்தார்.

டாக்டர் சுப்பிரமணியம் [illegible] தைய காரியதரிசி மிஸ்டர் அலக்ஸாண்டர் வேறு ஒரு முனிசிபாலிடிக்கு கமிஷனராக நியமிக்கப் படுவதாகத் தெரிவதால் அவரை எங்கும் போக விடாது போர்டிலேயே காரியதரிசியாக வைத்துக் கொள்ள வேண்டுமென ஓர் பிரேரணை கொண்டுவந்தார். நீண்ட விவாதத்திற்குப் பிறகு தலைவர் இதை சரியான தீர்மான மல்லவென்றும், இதை அடுத்தக்கூட்டத்திற்கு கொண்டுவரலாமென்றும் கூறி பிரேரணையைத் தள்ளி விட்டார்.

#### பியூன்களுக்குகதருடுப்பு

போர்டு பியூன்களுக்கு வருஷம் ஒன்றுக்கு 3 செட்டு கதர் உடுப்புகள் வாங்கிக்கொடுப்பதென்று தீர்மானிக்கப்பட்டது. உடுப்புகளுக்கு பதிலாக ஒரு வேஷ்டி, ஒரு ஷர்ட்டு, ஒரு துண்டு ஆகியவைகளைக் கொடுப்பதென்றும் இதை அவர்கள் வீட்டிலேயே கூட உபயோகித்துக் கொள்ளலாமென்றும் கூறப்பட்டது

ஸ்ரீமான் வள்ளியப்ப செட்டியார் கூட்டத்தை ஒத்தி வைக்க வேண்டுமென ஓர் தீர்மானத்தைக் கொண்டுவந்தார். இது நிறைவேறியது.

பிறகு கூட்டம் கலைந்தது.







## இந்தியாவின் தீர்மானம்

புதுடெல்லி, நவ 25—

இன்று நடந்த ராஜாங்கசபைக் கூட்டத்தில் இன்ஷ்யூரன்ஸ் மசோதா சிற்சில திருத்தங்களோடு இறுதியாக நிறைவேற்றப்பட்டது. இது அடுத்த ஜனவரி மாதம் 31-ம் தேதி நடக்கப்போகும் அசெம்பிளிக் கூட்டத்தில் மறுபடி கொண்டுவரப்பட்டு இறுதியாகப் பட்டுவாடாச் செய்யப்படும்.

கேள்வி நேரத்தின் பொழுது இலங்கை கிராமக்கமிட்டிச் சட்டத்தில் இந்தியத் தொழிலாளர்களுடைய வாக்குரிமையைப் பற்றி சிரத்தாக்கமிட்டியினல் செய்யப்பட்டிருப்பதாகச் சொல்லப்படும் திருத்தத்தை பண்டிட் குன்ஸ்ரு சர்க்காரின்கவனத்திற்குக் கொண்டுவந்து ஒரு கேள்வி கேட்டார்.

அதற்கு மறுமொழியளிக்கையில் எமிகிரேஷன் இலாக்கா மெம்பராகிய ஸர் ஜகதீஸ் பிரசாத் பின் வருமாறு கூறினர்:— இந்த விஷயத்தைக்குறித்து இந்திய அரசாங்கம் இலங்கை அரசாங்கத்தோடு கடிதப் போக்குவரத்து நடத்திக்கொண்டிருக்கிறது. இலங்கையிலும் இந்தியாவிலுமுள்ள இந்திய மகாஜனங்களின் அபிப்பிராயத்தை இந்தியா சர்க்கார் பூரணமாகப் பரிசீலனை செய்வார்கள். இலங்கை வாழ் இந்தியரின் வாக்குரிமைப் பிரச்னை திருப்திகரமாகத் தீர்த்து வைக்கப்பட்டாலொழிய புதியதொழிலாளிகளை இலங்கைக்கனுப்பிவைக்கும் உத்தேசம் இந்திய அரசாங்கத்திற்குக் கிடையாது.

### லாயர் நோவல்ஸ் மரணம்

சிங்கப்பூரில் பிரபல லாயரான திரு. ரோலண்ட் பிரடலோடு பாகஸ்தராக இருந்த சிறந்த லாயரான திரு. வி. டி. நோவல்ஸ் மரணமடைந்தார்.

### பிரிட்டிஷாருக்கு எச்சரிக்கை

#### வர்த்தகர் சங்கத்தில் பிரசங்கம்

கல்கத்தா, நவ 25—

இந்திய வர்த்தக சங்கத்தின் கூட்டத்தில் இன்று தலைமை வகித்த ஸ்ரீ. எம். எல். ஷா, இந்தியா-பிரிட்டன் வர்த்தகப் பேச்சுகள் விஷயமாக சர்க்கார் அனுஷ்டிக்கும் சொன்னையைக் கண்டித்துப் பேசினர்.

'1936ம் வருஷத்திலேயே இந்தியா சட்டசபை ஒட்டவா ஒப்பந்தத்தை ரத்துச் செய்யத்தீர்மானம் நிறைவேற்றி விட்டது. ஆனல் தீர்மானத்தை சொல்லளவில் மட்டுமே சர்க்கார் நிறைவேற்றியிருக்கிறது. ஒட்டவாச் சலுகைகள் இன்னும் நீடிக்கின்றன.

இந்த சந்தர்ப்பத்தில் நான் பிரிட்டிஷ் வர்த்தகர்களை எச்சரிக்கிறேன்;

அவர்கள் இப்போது காட்டும் மனப்பான்மை இரண்டு நாட்டுக்கும் வர்த்தக சமரசம் ஏற்படுவதற்கு இடையூறாயிருக்கிறது.

இதே மனப்பான்மை நீடிக்குமானல் பிரிட்டிஷார் எதற்காக இவ்வாறு செய்கிறார்களோ அந்த லக்ஷியமே பாழடைந்து போகும்.



## காரைக்குடி முனிஸிபாலிட்டி

### சர். ஜகதீச சந்திரபோஸுக்கு அனுதாபம்

(நமது நிருபர்)

காரைக்குடி முனிஸிபாலிடியின் சாதாரணக் கூட்டம் ஒன்று 27-11-37வ சனிக்கிழமை பிற்பகல் 3½ மணிக்கு சேர்மென் திருவாளர் மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் கூடியது. கூட்டத்திற்கு தலைவருட்பட 14 அங்கத்தினர்கள் வந்திருந்தார்கள்.

ஆரம்பத்தில் சபையின் அனுமதியின் பேரில் கவுன்சிலர் திரு. ரெ. கோ. ரெங்கராமானுஜய்யங்காரவர்கள் கீழ்க்கண்ட ஸ்பெஷல் தீர்மானத்தை பிரேரேபித்தார்கள்.

"சயன்ஸ் எக்ஸ்பர்ட் சர் ஜகதீச சந்திர போஸ் அவர்கள் அகால மரணம் அடைந்ததற்கு இக்கவுன்சில் தனது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்வதோடு ஷை யாரின் மனைவிக்கு நமது அனுதாபத்தை அறிவிக்கும்படி சேர்மென் அவர்களைக் கேட்டுக்கொள்கிறது. இதற்கறிகுறியாக இன்றைய கூட்டத்தை 29-11-37வ திங்கட்கிழமை பகல் 2 மணிக்கு ஒத்திவைத்திருக்கிறது."

இதை திருவாளர் மு. ராம. பெரியணன் செட்டியாரவர்கள் ஆமோதித்தார்கள்.

திருவாளர் ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் அனுதாபத்தைத் தெரிவிப்பது அவசியம் என்றும் ஆனல் கூட்டத்தை ஒத்திவைக்க வேண்டாமென்றும் ஒரு திருத்தம் கொண்டுவந்தார்.

இந்த இரண்டு தீர்மானங்களும் முறையே மினிட் புஸ்தகத்தில் பதியப்பட்டன.

ஆனல் திருத்த தீர்மானத்தை ஒருவரும் ஆதரிக்கவில்லை யாதலால் அசல் தீர்மானம் நிறைவேறி அத்துடன் கூட்டம் கலைந்தது.

நவம்பர்மீ 29வ திங்கட்கிழமை பிற்பகல் 2 மணிக்கு காரைக்குடி முனிஸிபல் சபையின் சாதாரண மீட்டிங் ஒன்று நடந்தது. ஒன்பது கவுன்ஸிலர்கள் வந்திருந்தனர். சேர்மென் வராததால் திருவாளர் சிமு. அரு. நாராயணன் செட்டியாரவர்கள் தலைமைவகித்தார்கள். கவர்ன்மெண்ட் ஆர்டர்கள் முறையே ரிகார்டுசெய்யப்பட்டன. கல்லேயன் ஆசாரித் தெருவில் ஒரு பள்ளிக்கூடம் திறக்க கவுன்சிலர் சாங்ஷன் செய்திருந்ததற்கு, "தற்பொழுது இருக்கும் பள்ளிக் கூடங்களுக்கு தகுந்த கட்டிடங்களும் போதுமான சாமான்களும் வாங்கிய பின்பு புதிய பள்ளிக்கூடம் திறக்கும் விஷயம் யோசிக்கலா" மென்று ஜில்லா கல்வி ஆபீசரிடமிருந்துவந்த கடிதம் ரிக்கார்டு செய்யப்பட்டது. கமிஷனர் மீண்டுமொரு முறை இவ்விஷயத்தை கல்வி ஆபீசருக்கு எழுதவதென தீர்மானிக்கப்பட்டது.

முனிஸிபல் கௌன்சில்களில் வேலைபார்க்கும் உத்தியோகஸ்தர்களுடைய சிப்பந்திகளின்மனைவிமார்களும் அவர்களுடையஇதர குடும்பஸ்தர்களும்,உள்ளூர்தேர்தல்களிலோ அல்லது லெஜிஸ்லேடிவ் தேர்தல்களிலோ அங்கத்தினராக நிற்பதிலிருந்தோ அவைகளில் கலந்து கொள்வதிலிருந்தோ தடுக்கப்பட வில்லை என்ற கவர்ன்மெண்ட் உத்தரவு ரிகார்டு செய்யப்பட்டது.

தேனாற்றுப் பாலத்தை விஸ்தரிக்க ரூ 1500ம் நாகநாதபுரம் மயானத்தை சீர்திருத்தம் செய்ய ரூ 2400ம் சாங்ஷன் செய்யப்பட்டன.

37-38ம் வருடத்திற்கு முனிஸிபல் ஆஸ்பத்திரிக்கு தேவையான பாண்டேஜ், காஜ் துணிகள் உள்ளூர் கதர் வஸ்திராலத்தில் வாங்குவதென தீர்மானிக்கப்பட்டது.

1938-39ம் வருஷத்திய பட்ஜெட்டை பரிசீலனை செய்ய ஒரு ஸ்பெஷல் கமிட்டி நியமிக்கப்பட்டது. திருவாளர்கள் சு. சீ. நமு. முகம்மது இப்ராகிம் ராவுத்தர், அ. ராம ராம ராமநாதன்செட்டியார்,டாக்டர் சுப்பிரமணியம், சிமு. அரு. நாராயணன் செட்டியார் ஆகியோர்களை கமிட்டி மெம்பர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது.

கல்லுக்கட்டி நான்கு மூலைகளிலும் ஒவ்வொரு பாதரச மின்சார விளக்குகள் போட வேண்டுமென்ற கமிஷனரின் குறிப்பு சாங்ஷன் செய்யப்பட வில்லை.

கீழ்தர முனிஸிபல் சிப்பந்திகளுக்கும் கூட்டுபவர்கள் முதலிய ஹரிஜனங்களுக்கும்பிராவிடண்டுபண்டின்பிரயோஜனங்களை அளிப்பதென தீர்மானிக்கப்பட்டது.

இம் முனிஸிபாலிட்டியில் வேலைபார்க்கும் எல்லா ஹரிஜனங்களுக்கும் ஒருவருடத்திற்கு ஒரு ஜோடி அரைக் கால்சட்டையும், ஒரு ஜோடி அரைக் கைசட்டையும் கதரில் சப்ளை செய்ய சாங்ஷன் செய்யப்பட்டது. பின்பு பல எஸ்டிமேட்டுகளும் பில்களும் சாங்ஷன் செய்யப்பட்டன.

கீழ ஊரணியிலிருக்கும் மின்சார சக்தியால் ஓடும் கடிகாரத்தை கல்லுக்கட்டிக்கு மாற்றிவிட வேண்டுமென்ற தீர்மானம் நிறைவேறியது.

கல்லுக்கட்டி மேல்கரையிலுள்ள மார்க்கெட்டில் கடைகளை குத்தகை விடும் விஷயமும் ஷை மார்க்கெட்டில் காய்கறி கடைகளின் பேரில் பீஸ்வசூலிக்கும் பாத்தியதையை குத்தகை விடும் விஷயமும் தேதி குறிப்பிடப்படாமல் ஒத்திவைக்கப்பட்டன.





## காந்தி குல்லாப் பெருமை

### மலேயாவில் அதிசய சம்பவங்கள்

மலேயாவில் இரண்டு இந்திய கூலிகள் சண்டை போட்டுக்கொண்டு, அதில் கதர் குல்லாயணிந்திருந்தவன் கெட்ட வார்த்தைகள் பேசினனும். உடனே மற்றவன் "நீ கதர் குல்லாயை கழற்றி விட்டு இந்த வார்த்தையைப் பேசு" என்றானும். தக்ஷணமே கோபம் மாறி இருவரும் நேசமானார்களாம்.

இன்னொரு சமயம் ஒரு கூலி லேபர் எக்ஸ்டிரா அஸிஸ்டெண்டு கன்ஸர்வேடரிடம் ஒரு குற்றச்சாட்டுகொண்டு போனானாம். அதற்கு அவர் அதைப் பொய்யென்று உணர்ந்து "நீ காந்தி குல்லாயணிந்து பொய்யுரைத்தாயானல் தியாக புருஷனாகிய மகாத்மா காந்தியை அவமதித்ததாகும். உண்மையைச் சொல்லிவிடு" என்று சொன்னதும் அந்த இந்தியர் வேறு மாதிரியாக நடந்ததை பூராவாகவும் சொல்லி விட்டாராம்.

### தர்மத்துக்கு 17 லக்ஷம்!

கல்கத்தா நவ 25வ

காலஞ்சென்ற ஸர் ஜகதீஷ் சந்திரபோஸின் சொத்துக்களைப்பற்றிய செய்தி வருமாறு:—

காலஞ்சென்ற ஸர் ஜகதீஷ் சந்திரபோஸ் தமது சொத்தில் சுமார் நான்கு லக்ஷம் ரூபாயை அநேக பொதுஸ்தாபனங்களுக்கு உயில் எழுதி வைத்திருக்கிறார். இவைகளிற் பெரும்பாலானவை கல்வி ஸ்தாபனங்களே யாகும். உயில் சம்பந்தமாக சட்டப்படி கவனிக்கவேண்டிய சம்பிரதாயங்கள் நடந்து முடிந்தவுடன் இந்த ஸ்தாபனங்களின் பெயர்கள் வெளியிடப்படும்.

மேற்படி நான்கு லக்ஷம் ரூபாயையும் சேர்த்து ஸர். ஜே. ஸி. போஸ் தர்மத்திற்காக இதுவரை மொத்தம் 17 00,000 ரூ. வழங்கியிருக்கின்றார்.

### 5 லக்ஷ வெள்ளி கட்டிடம்

சிங்கப்பூர், நவ. 25—

நெதர்லேண்ட் டிரேடிங் சொஸைட்டிக்காக சிங்கப்பூரில் ஓர் பெருங்கட்டிடம் கட்ட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. இதற்குத் திட்டமிடப்பட்டிருக்கும் தொகை 5,00000 வெள்ளிகளாம். இது தற்கால நவீன முறைப்படி கட்டப்படுமாம். மூன்று அடுக்குகளுடன் கம்பெனிக் காரியாலயங்கள் உச்சியிலும் அமைக்கப்படும். மற்றும் கடைசி மாடியில் ஒரு பேட்மின்டன் கோர்ட்டும் அமைக்கப்படுகிறது. ஸ்வான், மேக்லேன் என்பவர்கள் அடுத்த வருட ஆரம்பத்தில் வேலைகள் தொடங்குவார்களென்றும் 12 மாதங்களில் இதை கட்டிமுடித்து விடுவார்களென்றும் கூறப்படுகிறது.

### இந்தியன் ஓவர்சீஸ் பாங்க் மானேஜர் மரணம்

பினங்கிலுள்ள இந்தியன் ஓவர்ஸீஸ் பாங்கியின் மானேஜர் திரு. எஸ். நடராஜன் 17-11-37வ காலையில் மரணமடைந்தார்.

அத்தியாயம் 1
விதியின் விந்தை
விருத்தம்

அன்பனும் அருணன் காணும்
அருஞ்சுடர்தனைத் தனிக்கும்
இன்பமாம் மாலைநேரம்
இளந்தளிர்த் தென்றல்வீச
துன்பமே மிகவடைந்து
துடித்து மெய்சோர்ந்த தோன்றல்
மன்புகழ் சோலையோரம்
மயங்கியே நடக்கலுற்றான்

அருணன் தனதுமுழுகிரணங்களையும் ஒடுக்கி மேற்றிசையில் மறையுந்தருணம் இன்பமாகிய நறுமலர்கள் மலர்ந்து கமழும் பூஞ்சோலையின் அளவிட முடியா அழகைக்கண்டு மயில்கள் தோகையை விரித்தாட குயில்கள் இனிமையாய்ப்பாட அன்னம் கிளி முதலிய பறவைகள் அகங்களித்து விளையாட மைனா சிட்டு புல்புல் தாரா வானம்பாடி காரை முதலியன கவலையின்றி நடமாட இளந்தென்றல் இனிமையாய் எங்கும் திகழ மல்லிகை முல்லை இருவாக்ஷி செண்பகம் பாரிஜாதம் மற்றும் நானாவித மலர்களின் வாசம் கமழ தேவர்களும் கண்டு பூவுலகில் இப்படிக் கொத்த எழில்மிக்க சோலையை இதுவரையும் கண்டதில்லை என்று புகழ அச்சோலையில் நாற்புறமும்மா,பலா,வாழை, கமுகு முதலிய தருக்கள் செழித்து ஓங்கி பார்ப்பதற்கு மிக்க பரவசத்தைக் கொடுக்க இன்னும் அம்மரங்களில் பலவகைக் கொடிகள் சுற்றிப்பிணைந்திருக்க கண்டோர் மனதைக் கவரும் சக்தி வாய்ந்த மலர்வனத்தின் வழியாய் சுமார் இருபத்திரண்டு வயது மதிப்புடைய ஓர் வாலிபன் அவ்வழிசென்றான். பார்க்கும்பொழுதே அவன் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்து கஷ்டமான நிலையிலிருந்து வருகிறானென்பது நன்கு விளங்கும். அவனது திடகாத்திர தேகம் அயர்ந்து சோர்வுற்றுங்களைப் படைந்திருந்தது. அவனது இருபாதங்களும் நடப்பதற்கு சக்தியற்றுப் பின்வாங்கின. தலைசுழன்றது-கண்கள் ஒளியிழந்தன. உடல் தளர்ந்தது. ஆயினும் மனந்தளராது அவ்வாலிபன் மெதுவாய் அடிமேலடி வைத்து தள்ளாடித் தத்தி நடந்துகொண்டே ஒவ்வொரு இடமாகத் தங்கித் தயங்கிநின்று பின்பு சற்று திடங்கொண்டு மறுபடியும் தன் வலிமையால் சிறிது மெதுவாய் நடந்து தானிருக்கும் நிலையை ஆராய்ந்து ஒரு நிமிடம் மௌனமாய் யோசிப்பான். அதனை எண்ணிக் கண்ணீர் விடுவான். மறுபடியும் மனந்தேறுவான். சற்று நடப்பான். அவன் மனக்கண் முன் தன் வீட்டில் தன்னைப் பத்து மாதம் சுமந்து பெற்றுவளர்த்த தாய்—தன்னை சீராட்டித் தாலாட்டிப் பாலூட்டிப் பரிந்து வளர்த்த தாய்—அல்லும் பகலும் தன் நலத்தைக் கருதாது காத்து வந்த கருணையுள்ள தாய்—ஐயோ தன்னையீன்ற தாய்-பட்டினியால் வாடி களைப்பெய்தி கண்பஞ்சடைந்து காதடைத்து உடல் வாடி மனஞ்சோர்ந்து மயங்கி மண்மீது மயக்கமாய்க் கிடப்பதுபோல் அவ்வாலிபனின் மனக்கண்ணில்தோன்றும். உடனே தன்னையு மறந்து கண்ணீர் விடுவான். கதறுவான். பெருமூச்செறிவான். கடவுளை வணங்குவான். பணிவான். தொழுவான். ஐயோ, அண்டினோரை ஆபத்து வேளையில் ஆதரிக்கும் அருட்பெருஞ் சோதியே. உன் அருள்தான் மறைந்ததோ? ஈ, எறும்பு முதல் எண்ணற்ற பிரிவுக்கும் இரையளிக்கும் ஈசனே! என் துயரைப்போக்குவதற்கு உன் மனம் இடந்தரவில்லையோ. கருணைக் கடலென்றும் அனாதரக்ஷகனென்றும் உனையழைக்கும் திருநாமம் அவனியில் மறைந்ததோ. காலை முதலாய் அலைந்து திரிந்தும் ஓரிடத்திலாகிலும் வேலையொன்றும் கிடைக்கவில்லையே. ஐயோ இன்றைய சாப்பாட்டிற்கு நாங்களென்ன செய்வோம் தெய்வமே. நம் குமாரன் வேலைசெய்து கூலிவாங்கி வருவானென்று மகிழ்ச்சியுடன் எனது தாய்வழியை எதிர்பார்த்துக்கொண்டிருப்பாளே. அந்தோ என்னைப் பாழும் உலகில் படைத்த பரமனே. பரம்பொருளே என் தாயின் துயர் தாங்கிய முகத்தை எப்படி பாவி நான் கண்ணால் பார்ப்பேன்? என்னையீன்று வளர்த்து எவ்வளவோ துயர்களை சகித்துவந்த என் அன்னை இன்று முழுமையும் பட்டினி கிடப்பதென்றால் ஆ அவளுடல் எப்படித் தாங்கும்? எங்காகிலும் வேலை கிடைத்தால் அதைச் செய்து அவர்கள் கொடுக்கும் கூலியை என் தாயிடம் கொண்டு கொடுத்தால் அதைக்கொண்டு ஏதாவது இரவு சாப்பாட்டிற்கு வழிசெய்வாள். ஐயோ, எனக்கின்று எங்கும் வேலை கிடைக்கவில்லை. குறைந்தகூலியைப் பெற்றுக் கொண்டு வருந்தி நாள்முழுதும் வேலை செய்ய இசைந்தாலும் அதுவும் இல்லை என்று சொல்கிறார்களே. காலை முதல் தண்ணீர் கூட அருந்தாமல் தத்தளித்து அலைந்து திரிந்து கெஞ்சி வருந்தி வேண்டியும் எங்கும் வேலை காலியில்லை என்று கூறிவிட்டார்களே. ஆ இவ்வுலகில் தனது தாயாரைப் பேணும்பாவியாகிய நான் இருந்தும் என் பயன்? ஐயோ சுழலுதே தேகம்தளருதே. என் அன்னையிடம் எப்படி யின்று கூலியொன்றும் கிடைக்கவில்லை என்று கூறுவேன்? அவள் காலை முதல் வருந்தி வாடி என் வரவுக்காகக் காத்திருப்பாளே.

அண்டினோர் தன்னைக்காக்கும்
அருட்பெருஞ் சோதியே நீ
எண்டிசை தன்னிலென்மீதிரங்கிடா
தென்ன வஞ்சம்?

ஆ அருமை அன்னையே! உன் நிலையை எப்படி என் கண்களினால் கண்டு மனஞ் சகிப்பேன் ஐயோ கடவுளே இன்று நான்,

எந்த இடத்தினில்
சென்றிட்டாலும் வேலை
இல்லை யென்றே பதில்
சொல்லுகின்றார்

# அருமை நாதன்

(அல்லது)

# அதிசயபுரியின் அகோரக்கொலை



புதுவை ஸ்ரீமதி R. S. ராஜலக்ஷ்மி

சொந்த என் அன்னையின்
சோகத்தை மாற்றிட
தொல்லுலகில்
வழியில்லை கண்டாய்

அத்தனேவுனையன்றியிந்த அவனியில் ஆதரிப்பார் யாருளார். நீ சித்தமிரங்கி எங்கள் தீராத் துயரைப் போக்குவாய். என் தாய் ஆகாரம் அருந்தி களை தீர்ந்தால் அதுவே எனக்கு போதுமானது. எப்படியாவது இரவு உணவிற்கு வழி காட்டுவாய் துயர் ஓட்டுவாய் மகிழ்வூட்டுவாய் இருள் மாற்றுவாய் எங்கள் மனதைத் தேற்றுவாய் உனது கருணையால் எங்களைக் காப்பாற்றுவாய் கடவுளே இன்று சோதனை போல ஒரு வழியும் காணவில்லையே என்று அழகு பொருந்திய முகத்தில் கண்ணீர் ஆறுபோல் பெருக உடல் நனைய தவித்துத் தத்தளித்தான் வாலிபன். மறுகணம் முன் தோன்றிய தன் தாயின் உருவமே மறுபடியும் காட்சியளித்தது. ஆ ஐயோ அம்மா அரும்பாவியாகிய என்னைப் பெற்று உனக்கென்ன சுகம்? ஆ உன் மேனி வாடி கண்ணீர் விட்டு நீ கதறுவையே அம்மா நீ படும் துயரைக் கண்ணால் பார்ப்பதற்கோ பாவி நான் உலகில் உயிருடனிருக்கிறேன். பசியின் கொடுமையால் பரிதவிக்கும் உனக்கு உணவளிக்கும் சக்தி எனக்கில்லையே. அந்தோ பொழுது போகும் நேரமாய் விட்டது. இனிநான் எங்கு செல்வது எப்படி வழிதேடுவது யாரிடமேனுஞ் சென்று பிச்சையாகிலும் கேட்போமென்றாலோ என்னை கண்டவர்கள் என்டாவுனக்கு என்னடாகேடு? எங்கேயாவது வேலைசெய்து ஜீவனம் செய்கிறதுதானே என்று கடிந்து பேசுவார்களே. நான் நேராய் என்வீட்டிற்குச் சென்று என் தாயிடம் நடந்தவைகளைக் கூறிவிடுகிறேன். கடவுள் பிறகு விட்டவழி விடட்டும் என சற்று மனந்தேறி சிறிது நடக்கலானான். தன்னாலியன்றவரை மெதுவாய் தென்புடன் சிறிது தூரம் வரை நடந்தான். அதற்குமேல் அவனால் நடக்க முடியவில்லை. அந்தோ பரிதாபம்! காலை முதல் கடும்பசிப் பிணியால் வாடும் வாலிபனால் நடக்க சக்தியிருக்குமா? அதன் சோலைவழியாய் செல்வதினாலேயே தான் மயக்கமுறும் வேளையில் வசந்தகாலத்து இளந்தென்றல் குளிர்ந்து அவன்மீது படுவதால் சற்று ஆரோக்யமாய் நடப்பான். அப்படியும் அவனால் எவ்வளவு தூரந்தான் நடக்க வியலும்? தள்ளாடி நடந்தான் கால்கள் அயர்ந்து பின்னிடைந்தன. கண்கள் இருண்டது உடல் சுழன்றது. அந்நிலையில் அவ்வாலிபன் அடியற்றமரம் போல மண்மீது விழுந்து தன் நினைவையிழந்து களைத்து மூர்ச்சையாயினான்.

மாலை வேளையாகையால் மலர்வனத்தின் வனப்பைக்கண்டு அங்குள்ள நறுமலர்களை கொய்வதற்காக பிரம்பினால் பல சித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய ஓர் சிறு தூக்குக் கூடையுடன் பதினைந்து வயதுடைய பாலகுமாரி யொருத்தி கண்டோர் கண்களைக்கவரும் கட்டழகு வாய்ந்தவள். முழுவெண்மதி போல முகப்பிரகாசமும் மாரன்கை வில்லோவென மதிக்கத்தக்கப் புருவமும் பவளம்போன்ற அதரமும் முத்துப்போன்ற பல்வரிசையின் ஒளியும் சிறுத்தயிடையும் செந்நிறமேனியும் கறுத்த கூந்தலும் கமலமலர் போன்ற பாதமும் கொஞ்சும் மொழியும் குவளைவிழியும் அன்புவழியும் அதிசய முறுவலும் அம்சத்தைப்பழிக்கும் நடையும் குயிலை வென்ற குரலும் மின்னலைப்போன்ற மேனியும் இன்னும் மனிதரால் வர்ணிக்க முடியாத வனப்பு அமைந்த எவ்வன மங்கையாள் தனது மெல்லிய கரங்களால் சோலையிலுள்ள ரோஜா புஷ்பங்களைப்பறித்துக் கொண்டே வசந்தகால அழகை காண்பதற்காய் தனது பார்வையை நாற்புறமும் செலுத்தினாள். சோலையினருகில் மயக்கமாய்க் கிடக்கும் வாலிபன் அவளது பார்வையில் தென்பட்டான். ஈவு இரக்கம் தயை தாக்ஷிணியம் ஒருங்கேயமைந்த அவ்வுத்தமியாளின் மனம் இளகியது. ஐயோ அந்தோ படுத்திருக்கும் வாலிபனைப் பார்த்தால் நினைவின்றி மயக்கமாய் இருப்பவன் போல் தோன்றுகிறது. எதற்கும் நாமருகில் சென்று பார்ப்போம். அவனது களைப்பைத் தீர்ப்போம் என்று நினைத்து தான் பருவமடைந்த மங்கையாயிருப்பதால் ஆடவர்கள் முன்னிலையில் வரக்கூடாதென்ற நீதி யிருப்பினும் ஆபத்து வேளையில் ஒருவனைக் காப்பாற்றுவதே அவனியிலுள்ள ஒவ்வொரு மானிடர்களின் முக்கிய கடமை என்பதை நன்குணர்ந்து அவ்வாலிபனருகில் சென்று அவன் முகத்தை யுற்று நோக்கினாள். களங்கமற்ற அவன் வதனங் களைப்பால் சோர்ந்திருந்தது. பிரகாசம் பொருந்திய அவனது மேனியில் தூசி நிறைந்திருந்தது. உடனே அவ்வுத்தமியாள் ஐயா! ஐயா!! என பலமுறை கூப்பிட்டும் பதிலில்லாததினால் அம்மங்கையாள் வேகமாய் நடந்து சென்று குளிர்ந்த ஜலம் கொண்டுவந்து அவனது முகத்தில் தெளித்து மயிலிறகு விசிறியால் வீசி களைப்பைத் தெளியவைத்தாள்.

கன்னிகையின் கருணையால் களை நீங்கிய காளை கண் திறந்து பார்க்க தன்னருகில் ஓர் அரிவை அமர்ந்துகொண்டு அவளது மெல்லிய கரத்தால் தனக்கு விசிறியால் வீசுவதைக் கண்டு அளவிலா ஆச்சரியம் அடைந்தான். தேவ கன்னிகைபோல் திகழும் அம்மடமயிலாள் கேவலமாகிய எனக்குத் தன் சிரமத்தை சிறிதும் பாராமல் இவ்வித பேருபகாரம் புரிந்த நன்றிக்கு நாம் என்ன கைமாறு செய்யப்போகிறோம். கூலி வேலைக் கலைந்து வருந்தி நொந்து மயங்கிக் கிடக்கையில் எனக்குதவி புரிந்த மாதரசியின் காருண்யந்தானென்னே! என்று பலவாறுடன் நினைத்து முடிவில்

(11-ம் பக்கம் பார்க்க)









## தேசீயக் கொடியும் ராய. சொ. அவர்களும்

திரு. M. சின்னையா செட்டியார்

தேச மக்களுக்கு தேசீயக்கொடி கௌரவிக்கத் தக்க ஒரு சிறந்த பொருளென்பதை யாரும் ஆக்ஷேபிக்கமாட்டார்கள். அதிலும் காங்கிரஸ் வாதிகளும், காங்கிரஸ் அபிமானிகளும் தேசத்தின் ஒற்றுமை யுணர்ச்சிக்கு அறிகுறியாக இருக்கும் தேசீயக்கொடியின் பெருமையையும் அதன் விசேடத்தையும் அறியாத மக்களுக்கு எடுத்துக் கூறக் கடமைப்பட்டிருக்கிறார்கள். அப்படியிருக்க உண்மையான தேசாபிமானமுடையவரும் சிறந்த காங்கிரஸ் வாதியும் ஒரு தேசீயப் பத்திரிகையின் ஆசிரியருமான நமது தோழர் ராய. சொ. அவர்கள் தேசீயக் கொடியை அவமதித்தார்களென்று ஒரு மகாநாட்டில் கண்டனத் தீர்மானம் வந்திருப்பது மிகவும் வருந்தத்தக்கது

ஆனால் கல்லெல்லாம் சுவாமிகளாகவும், கட்டிடங்களெல்லாம் கோயில்களாகவும் மதித்து வணங்கவேண்டுமென்பது எப்படி ஒரு மூடநம்பிக்கையிற் கொண்டுபோய்விடுமோ அதைப்போல் மூவர்ணத் துணியை யெங்குகண்டாலும் தேசீயக் கொடியாக மதித்து நடக்கவேண்டுமென்பதும் பொருத்தமான வாதமல்ல. மேலும் அது சாத்தியமான காரியமுமல்ல. சைக்கிள் மோட்டார், வீட்டுக்கூரைகள், அலங்காரக் கொட்டகைகள் எல்லாம் தேசீயக்கொடி மயமாக இருக்கின்றன. குழந்தைகளெல்லாம் தேசீயக்கொடி பிடித்து விளையாடுகிறார்கள். அந்தக் கொடிகளெல்லாம் மூவர்ணக் கொடிகளேயாம். அவை காலிற்படாமல் கையிற்படாமல் எடுக்காமல் துடைக்காமல் கடைசியாக எடுத்தெறியாமல் என்ன செய்வது? ஆகவே தேசீயக்கொடி இருக்குமிடத்தில் இருக்கும்போது தான் அதற்குரிய பெருமையும் விசேடமுமுண்டென்பதை எல்லோரும் ஒத்துக் கொள்வார்கள்.

பிரஸ்தாப விஷயத்தில் நண்பர் ராய சொ. அவர்கள் தேச மக்களின் அபிப்பிராயத்தைக் கேட்கிறார்கள். என்ன நடந்தது? என்ன நடந்திருக்கவேண்டுமென்பதைப் பிரேமையில்லாமலும் பாரபக்ஷமில்லாமலும் அபிப்பிராயங் கூற எல்லோரும் கடமைப்பட்டிருக்கிறோம். அப்படிப்பார்க்கும் போது நமது நண்பர் ராய. சொ. அவர்கள் மீது ஒரு சிறு குறைதான் காணப்படுகிறது! அதாவது கிழிருந்த மூவர்ணத் துணியொன்றைத் துணிமுறையில் உபயோகித்தார்கள். அதுசரி.பக்கத்திலிருந்த தோழர் அதிலும் தேசீயவாதியான ஒரு தோழர் அந்தத் துணிக்கு மகத்துவம் கற்பித்து அதைக் கௌரவிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகிறார். இடம் மகாநாடு கூடுமிடம். அந்த இடத்தில் எனையோர்க்கும் வழி காட்ட வேண்டிய ஸ்ரீமான் ராய. சொ. அவர்கள் பிடிவாதம் செய்யாமல் அதை அங்கீகரித்திருக்க வேண்டும். இதுதான் எனது அபிப்பிராயம்.







## காங்கிரஸ் கொடி

புதுவயல் கிராமக் காங்கிரஸ் கமிட்டி காரியதரிசியும், பஞ்சாயத்து போர்டு மெம்பருமான S. கிருஷ்ணமூர்த்தி கொடியை அவமதித்ததாகுமா என்ற ஸ்ரீ. ராய. சொ. அறிக்கைக்குப் பின் வருமாறு அபிப்பிராயந் தெரிவிக்கிறார்:—

இதுவரை காங்கிரசுக்கு பரம விரோதிகளாய் உள்ளவர்களே தேசீயக் கொடியை அவமதித்தார்களென்று பத்திரிகை வாயிலாகப் படித்திருக்கிறோம். காங்கிரஸில் முக்கிய ஸ்தானங்கள் வகிக்கும் ஒருவர் செய்கையளவில் தேசீயக் கொடியை அவமதித்தார் என்பது முதலாவதும், புதியதும், ருசிகரமுமான ஒரு பிரச்னையாகும்.

ஸ்ரீ. ராய. சொ. தமது அறிக்கையில் ஒரு சிலர் சூழ்ச்சியென்றும், பல காரணங்களை மனதில் வைத்துக் கொண்டு அகாரணமாகக் கொண்டுவரப்பட்ட தீர்மானம் என்றும், தேசீயக் கோடியை மதிப்பதில் எவருக்கும் பின்வாங்காத தான் கொடியை அவமதிக்கவில்லை என்று மகாநாட்டில் கூறுவதே தனக்கு ஒரு இழுக்கு என்று கருதிய முதலாவது காரணத்தால் சமதானம் சொல்லவில்லையென்றும் எழுதுகிறார்.

பல விஷயங்களை மனதிற்கொண்ட ஒரு சிலரின் சூழ்ச்சி இருந்திருக்கலாம். ஆனால் தீர்மானம் இல்லாத-நடக்காத ஒன்றைக் குறித்து கொண்டுவரப்பட்ட தீர்மானம் அல்ல. வாஸ்தவமாக என்ன செய்கையளவில் செய்யப்பட்டதோ அதைக் குறித்துத்தான் தீர்மானம் கொண்டுவரப்பட்டது. மேலும் ஆயிரக்கணக்கான ஜனங்கள் கூடியிருந்த மகாநாட்டில் குற்றம் சாட்டப்பட்டது. அந்த இடத்தில் சூழ்ச்சிக்காரர்களுக்காக பதில் சொல்லாவிட்டாலும் பொது ஜனங்களுக்கு உண்மை நிலை தெரியும்படி ஸ்ரீ. ராய. சொ. அவர்கள் விளக்கியிருக்கலாம்.

உதாரணமாக சூழ்ச்சியின் காரணமாக ஒருவன்பேரில் கோர்ட்டில் அனுவசியமான குற்றச்சாட்டு ஏற்படுத்தி கேஸ் கொண்டு வரப்படுகிறதென்று வைத்துக்கொள்வோம். அந்த இடத்தில் எதிரியாக உள்ளவன் தான் நிரபராதி என்று சொல்லி எதிர்வாதம் செய்யவில்லையானல் குற்றத்தை ஒப்புக்கொண்டவனாகக் கருதப்பட்டு தண்டிக்கப்படுவது நிச்சயம். அதேபோல் பிரஸ்தாப சம்பவம் நிகழ்ந்திருக்கிறது.

மகா நாட்டின் நடைமுறை தவறை உத்தேசித்து எந்தத் தீர்மானத்தின் மீதும் தான் பேசுவதில்லை என்ற முடிவுக்கு ஸ்ரீ. ராய. சொ. வந்திருக்கலாம். ஆனல், பிரஸ்தாப விஷயம் அவரது செய்கையைக் கண்டித்துக் கொண்டு வரப்பட்ட ஒரு குற்றச்சாட்டு.

அந்த இடத்தில் சூழ்ச்சிக்காரர்களுக்கும், பொது ஜனங்களுக்கும் தன்மீது சுமத்தப்பட்ட குற்றச்சாட்டு அநீதம் என்று எடுத்துக்காட்டி, பொறுப்புள்ள ஸ்தானங்களை வகிக்கும் ஒருவர் தன்னுடைய கௌரவத்தை நிலைநாட்டிக் கொண்டும், பிறர் சந்தேகங்களை நிவர்த்திசெய்யவேண்டிய ஒரு அரிய பொன் போன்ற சந்தர்ப்பம் பிடிவாதத் தன்மையினால் இழக்கப்பட்டதென்பதே எமது துணிபு.

தேசீயக் கொடியானது அலங்கரிக்க வேண்டிய ஆயத்தங்களுடன் மகாநாட்டுப் பந்தலில் வைக்கப்பட்டிருந்த காரணத்தாலும், அதனை ஸ்ரீ. ராய. சொ. உபயோகப் படுத்த முயன்ற முறையைக் குறித்து, எப்பொழுது ஒரு நபரால் ஆக்ஷேபம் செய்யப்பட்டதோ அந்தச் சந்தர்ப்பத்தில் பரிசுத்தமான—தூய்மையான தேசீயக் கொடியினல் அழுக்கான தூசியைத் துடைத்த செய்கையுடன் நில்லாது அதையே விரித்து ஆஸனமாக உபயோகப்படுத்தியது கண்டிக்கத்த செய்கைதான்.

(10-ம் பக்கம் பார்க்க)

குமரன்

காரைக்குடி
ஈஸ்வர-ஹூ கார்த்திகை-மீ 17வ

## வலுத்தவன் கை ராஜ்யமா?

இன்றைய உலக அரசியற் போக்கு வலுத்தவன் கை ராஜ்யமாக ஆகி வருகிறதென்பது நிதர்சனமான காட்சியாக இருக்கிறது. சென்ற ஐரோப்பிய மகாயுத்தம் முடிந்து 19 ஆண்டுகளாகின்றன. அதில் பல தேசங்களும் புத்தி படித்துக் கொண்டதாக அறியக் கிடந்தது. சமாதானத்தை எல்லா தேச மக்களும் விரும்பினர். சமாதானம் முடிந்தது. சமாதான தினமுங் குறிப்பிட்டு ஆண்டுதோறும் கொண்டாடப்பட்டு வருவதை யாரே அறியாதார்? உலக சமாதானத்தைப் பாதுகாப்பதற்கு சர்வதேச சங்கமும் ஏற்படுத்தப்பட்டு உயிருடன் இன்றுவரை இருந்துவருகிறது. ஆனால் இந்த 19 ஆண்டுகளில் 17 யுத்தங்கள் நடந்திருக்கின்றன. இந்த யுத்தங்களால் உயிர்ச் சேதமும், பொருட் சேதமும் ஏராளமாக ஏற்பட்டிருக்கின்றன. இருந்த தேசம் மற்றொரு தேசத்தின் கைக்கு மாறியிருக்கிறது. சில தேசம் பங்கு போடப்பட்டிருக்கிறது. சில தேசத்தில் ஆட்சியே தலைகீழாக மாறியிருக்கிறது இத்தனை மாறுதலும் இந்த சர்வதேச சங்கத்தின் சன்னிதானத்திலேயே நடைபெற்று வருகின்றன. இந்த யுத்தங்கள் அங்குமிங்குமாக சுமாராகப் பாவி சமீபத்தில் பெருகி வந்துகொண்டிருக்கிறது.

மஞ்சூரியா, அபிஸீனியா, ஸ்பெயின், சீனு போன்ற தலைகீழாகத் தேசங்களைக் கவிழ்க்கும் பெரிய யுத்தங்களும் தொடங்கி கவளீகாமாகி வருகின்றன. கடைசிவரை சர்வதேச சங்கத்தை நம்பி அபிசீனியா நாசமடைந்தது. ஸ்பெயினில் பிராங்கோவின் கலக ராஜ்யத்தை எல்லாரும் கூடியவிரைவில் ஒப்புக்கொண்டு நிலைநாட்டி விடுவார்களென்று கருத இடமில்லாமற் போய்விடவில்லை. சீனுவின் விஷயம் என்ன ஆகுமென்று சொல்ல வேண்டுமா? பங்கு போட நாட் பார்த்துக்கொண்டிருக்கிருர்களென்று சொன்னுல் அந்த ஜோஸ்யம் பொய்யாகி விடுமா? ராவணனை ராமன் கேட்டமாதிரி ஒவ்வோர் அநியாயத்திற்கும் வெளிவாக மற்ற வல்லரசுகள் இனிமேலா வரப்போகின்றன? சென்ற யுத்த முடிவுக்குப்பின் இதுவரை நடந்திருப்பதென்ன? பலமுள்ளவன் பலமில்லாதவனை அடித்துப் பறிக்கலாம். ஏனென்று கேட்பாரில்லை. துணிந்தவன் இளைத்தவனை விழுங்கி ஏப்பமிடவேண்டியதென்ருகி விட்டது. இந்த மகா தர்மத்தைத்தான் ஜப்பான், இடாலி, ஜெர்மனியாகிய தேசங்கள் புனித தர்மமாகக் கொண்டு புறப்பட்டிருக்கின்றன.

மற்ற வல்லரசுகள் தங்கள் வேலையை ஒழுங்காகப் பார்ப்பதுடன் இவர்களுடைய அட்டூழியங்கட்கு அந்தரங்கமாக "ததாஸ்து" சொல்லிக்கொண்டும் வெளியில் எளிய தேசங்களுக்கு ஆறுதல் சொல்லிக்கொண்டும் வருகின்றன. இதனை நம்பும் தேசம் பறிபோவதையே காண்கிறோம். ஆனால் விண்ணப்பங்களும் கூட்டங்களும் கமிட்டிகளும் ஆலோசனைகளும் சமாதானப்பேச்சுகளும் அறிக்கைகளும் குறைந்தபாடில்லை. சர்வதேச சங்கம் ஒழிந்திருந்தால் சிறிய தேசங்கள் அதனை நம்பி நாசமடையாது. சர்வதேச சங்கத்தின் பலன் சிறிய தேசங்களை அசைய விடாதபடி பயமுறுத்தி அடக்கிப்போட்டு பலமுடைய தேசம் அவற்றை விழுங்குவதற்குச் செய்த ஸ்தாபனமாகி விட்டதென்பது எவருக்கும் விளங்கிய உண்மையாகி விட்டது.

என்ருலும் இந்த அநீதி நிலை பேறெய்த முடியாது. இந்த சில்லரைத் திருவிழா ஒரு பெரிய பிர்மோத்ஸவமாகவே முடியப்போகிறது. இப்பொழுது செய்துவரும் வல்லரசுகளின் அலட்சியமானது பெரிய உலகப் போரில் வந்து முடியாமல் தீராது. அதிலிருந்து உலகத்திலேயே ஒரு பெரும் மாறுதலேற்படப் போகிறது. அந்த நாளை சமீபத்தில் எதிர்பார்க்கலாம்.

### திரு. பிச்சப்பா சுப்பிரமணியம் வருகை

மலாயாவிலிருந்து திரு. பிச்சப்பா சுப்பிரமணியம் அவர்கள் கொழும்பு மார்க்கமாக வந்து சேர்ந்தார்கள்.

### நன்றி

தத்துவம் நகர சபைக்கு இந்தியர் தொகுதிக்கு அபேட்சகராக நின்றதில் இந் நவம்பர் இருபத்து மூன்றும் நாள் தேர்தல்விழா நடந்தது. இதில் இந்தியர்கள் எனக்கு வாக்களித்து வெற்றி தந்துள்ளார்கள். யான் தாய்நாட்டிலிருக்கும்போது என்பால் அன்பு கூர்ந்து வாக்களித்த நண்பர்கட்கு எனது மனமார்ந்த நன்றி உரியதாகுக.

சித. நாரா. நாராயணன்
ஆ. முத்துப்பட்டினம்
25—11—37

### எங்கள் நன்றி

எங்கள் திருமணத்தைப் பாராட்டி உள்நாட்டிலும் வெளியூர்களிலுமிருந்து பல அன்பர்களும் சங்கங்களும் பல ஆசிமொழிகளையும் வாழ்த்தையும் அனுப்பியிருக்கின்றனர். அவர்கள் யாவருக்கும் எங்கள் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்ருேம்.

வி. சி. பழனியப்ப செட்டியார்
கண்டவராயன்பட்டி

### மெய்யப்பா பிரசவ சிசு சம்ரட்சண சாலை

ஸ்ரீமதி பென்னட்டின் அபிப்பிராயம்

இராமனுதபுரம் ஜில்லா கலெக்டரின் மனைவியான ஸ்ரீமதி M. B. பென்னட் அவர்கள் 24—11—37வ. யன்று காரைக்குடி மெய்யப்பா சிசு சம்ரட்சண சாலைக்கு விஜயஞ் செய்து அதைப் பற்றி பின் வருமாறு விஸிட்டர் புஸ்தகத்தில் எழுதியிருக்கிருர்:—

இந்த ஆஸ்பத்திரி மிக நன்ருக வேலை செய்கிறது. இதில் ஏற்கனவே பார்க்கப்பட்ட 37 கேசுகளும் வெற்றிகாமாக குணமடைந்திருக்கின்றன. இந்த ஆஸ்பத்திரியினர் செய்துவரும் வேலை ஒரு பெரிய வேலையைப் பூர்த்திசெய்வதாகும். இவ்வாஸ்பத்திரி பூரண வெற்றியை அடைய விரும்புகிறேன்.

### காரைக்குடி கோவாபரேடிவ் பாங்கு

காரைக்குடி கோவாப்ரேடிவ் அர்பன் பாங்கின் மகாசபைக் கூட்டம் 30-11-37வ மாலை நடைபெற்றது. 36-37 வருஷத்திய ஆடிட் சர்டிபிகேட் வாசித்து அங்கீரிக்கப் பெற்று பங்குதாரர்களுக்கு 4¾% லாபம் பிரித்துக் கொடுப்பதென்று தீர்மானிக்கப்பட்டது.

### திருச்சியும் சேலமாகிறது

நவம்பர் 20-வ நடைபெற்ற திருச்சி ஜில்லா போர்டில் சேலம் ஜில்லாவில் மதுவை ஒழித்தபடி திருச்சி ஜில்லாவிலும் அடுத்த வருட முதற்கொண்டு கள்ளுக் கடைகளை எடுக்க வேண்டுமென்று தீர்மானம் செய்யப் பட்டிருக்கிறது.

# ஸ்பெயின் யுத்தத்தில் நாட்டுக்கோட்டை செட்டியார்

## ஜெர்மன் விமானங்களில் நான்கு காலி

## ராம. வீரப்பனின் ஆகாயப் போர்

செட்டியார்கள் ஆழ்ந்த சிந்தனையும் கோழை மனதும் குடிகொண்டவர் என்று பலரும்கருதுகின்றனர். இதற்கு முற்றிலும் மாருக கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலையின் மாணாக்கனுகிய 21 வயதுள்ள செட்டியார் வாலிபனின் தீரச் செயல் விபரம் நமக்குக் கிடைத்திருக்கிறது.

இந்த வாலிபரின் ஊர் புதுவயல். இவர் பெயர் ராம. வீரப்பன். இங்கிலாந்தில் 16 வது வயதிலிருந்தே அங்கு வசித்ததிலிருந்தே இவர் மனப்போக்கு அடியோடு மாறி உற்சாகபுத்தி மேலிட்டது. எப்போதும் நல்ல விளையாட்டுக்காரர். "சாக்கர்" என்ற விளையாட்டில் பிரியம் அதிகம். விளையாட்டாக விமானம் ஏறினதுமுண்டு. அவரது மெல்லிய உருவம் மற்ற மாணாக்கர்களுக்கு சகஜமாகத் தெரிந்தது.

ஸ்பெயின் யுத்த ஆரம்பத்திலிருந்து இவருக்கு அதில் கலந்துகொள்ளவேண்டுமென்ற ஆவல் அதிகரிக்கத் தொடங்கியது. இதன் மத்தியில் இங்கிலாந்து இந்த யுத்தத்தில் நடுநிலைமை வகிக்கத் தீர்மானித்துவிட்டது. ஒரு நண்பனின் உதவியைக்கொண்டு, இவ்வாலிபனும் வேறு 4 ஆங்கிலேயருமாக யுத்தம் நடக்குமிடத்தை ரகசியமாய் அடைந்தனர்.

வீரப்பனுக்கு விமானப்பயிற்சி என்பது கிடையாது. ஸ்பெயின் சர்க்கார் படையில் சேர்ந்து மூன்றுவாரம் பீரங்கிப் பிரயோகத்திலும், இரண்டு வாரம் எதிரிகோட்டம் பார்ப்பதிலும் தேர்ச்சிபெற்று, பிராங்கோவின் சைனியங்களை எதிர்த்து சண்டை செய்தார். அக்காலத்திற்குள் இவர் கைப்பற்றிய எதிரியின் விமானங்கள் நான்கு. விமானத்திலேயே இருந்து இவர் தொண்டாற்றினது 1800 மணிநேரம்.

இவர்கண்ட பிராங்கோ கக்ஷியாரின் குரூரச்செயல்கள், மனதைக் கலக்குகின்றன. பிராங்கோவின் சைனியத்தில் விமானிகள் பூராவும் ஜெர்மானியரும் இத்தாலியருமே. காலாட் படை முற்றும் மூர்ஜாதியார். இவருடைய கொடுஞ் செயல்களும் வீராவேசமும் சகிக்க முடியாதவை. இதற்கு எதிராக ஸ்பானிய சர்க்காரின் கக்ஷி முழுவதும் ருஷ்யர்கள். நமது வீரன் வீரப்பனும் சர்க்கார் தரப்பில் சேர்ந்தே போர் புரிந்தார். பாஸிஸ்ட் அக்கிரமங்களை அவர் அறவே வெறுக்கிருர்.

இவர் ஸ்பெயினைவிட்டு வெளியேறி வந்ததும் வேடிக்கைதான். இவர் மாட்ரிட் விமானக் கூட்டத்தில் சேர்ந்து யுத்தம் செய்தவர். ஒருநாள் விடுமுறையன்று வாலன்ஷியாவுக்குப் போயிருந்தபொழுது, பிரிட்டிஷ் குடிகளைச் சேர்ந்தவரென்ற முறையில் உடனே இவர் ஸ்பெயினைவிட்டு வெளியேறவேண்டுமென்று பிரிட்டிஷ் ஸ்தானிகர் ஊக்கமாகச் சொன்னுர். அப்படியே வாலன்ஷியாவிலிருந்தவாறே தனக்குத் தெரிந்த ஒரு காப்டனின் உதவியைக்கொண்டு ஒரு கப்பலிலேறி தண்ணீர் பீப்பாய் ஒன்றினுள், இடுப்பு ஆழத் தண்ணீருக்குள் ஒளிந்துகொண்டார். கப்பல் நடுசமுத்திரம் வந்தபின், கப்பல்காரர்கள் 37 மணி நேரம் தண்ணீரிலேயே இருந்து, களைத்து விறைத்துப்போன வீரப்பனை வெளியேற்றி ஆசுவாசப்படுத்தினர்.

இவர் ஒரு சமயம் ஏறி யுத்தம்செய்த விமானம் எதிரிகளால் தாக்குண்டு, பெட்ரோல் டாங்க், குண்டுகளால் துளைக்கப்பட்டது. தைரியமாக அருகிலிருந்த விமானக்கூடத்தில் இறங்கினுர். இவ்வளவு துணிச்சலாக ஆறுமாத காலம் நூதனமுறையில் விமானப் போர் செய்துவிட்டு நவம்பர் 19வ தன் தாய்நாடுவந்து சேர்ந்த வீரன் ராம. வீரப்பனும் செட்டியார்தான். செட்டியார் சமூகத்தின் இளைஞர் எதிலும் தேர்ச்சிப்பெறக்கூடியவர்களென்பதற்கு இது போதிய சான்ருகுமல்லவா?

### மஞ்சுகோ—பிராங்கோ

ஸ்பெயினில் பிராங்கோ அரசை ஜப்பான் தேசம் டிசம்பர் 1வ அங்கீகரிக்கிறதாம். ஜப்பானுல் கவளீகாம்செய்யப்பட்ட மஞ்சுகோராஜ்ஜியத்தை இடாலி ஒப்புக்கொண்டுவிட்டதாம். நல்லபோம்!

### அடமானத்தின் கதி என்ன?

சீனுவிலுள்ள முக்கிய துறைமுக பட்டணமான ஷங்ஹாய் துறைமுகத்தை ஜப்பானியர் பிடித்து கொண்டனர். அந்த சுங்க இலாகாவையும் கைப்பற்றி விட்டனர். இனி சுங்க வருமானம் ஜப்பானைச்சாரும். அதிலொரு ரகசியம் என்னவென்ருல் அந்த சுங்கத்தை அடமானம் பிடித்துக்கொண்டு மற்ற வல்லரசுகள் சீனுவுக்கு ஏற்கனவே கடன் கொடுத்திருக்கின்றனவாம். அந்த அடமானத்தை உட்படுத்தியா ஜப்பானியர் சுங்கத்தை கிரயம் வாங்கியிருக்கின்றனர்? கோவிந்தா?

### அம்பர்மாகாளம் ட்ரஸ்டி

மாயவரம்—அறந்தாங்கி லயனிலுள்ள அம்பர்மாகாளம் க்ஷேத்திர தேவாலயத்தின் டிரஸ்டியாக கோனுபட்டு ஸ்ரீமான் எஸ். பி. ஆர். எம். ராமனுதன் செட்டியாரை தேவஸ்தானக் கமிட்டியார் நியமித்திருக்கிருர்கள்.

### குன்னக்குடி

தேவஸ்தான போர்டு மெம்பர் நியமனம்

இத் தேவஸ்தானம் சூபர்விஷன் போர்டு இரு ஸ்தானங்களுக்கு ஏற்கனவே காரைக்குடி திருவாளர்கள் மெ. ச. ச. சிதம்பரம் செட்டியார், சி. மு. அரு. நாராயணஞ் செட்டியார் இருவர்களும் நியமனமான தோடு மூன்ருவது ஸ்தானத்திற்கு ஏழு மனுக்கள் தாக்கலாகி இருந்ததில், இராமனுதபுரம் ஜில்லாக் கோர்ட்டார் திரு. மரு சு. ரத்னவேலுசாமி செட்டியாரை மெம்பராக 29-11-37வ நியமித்திருக்கிருர்கள்.

### மைசூர் திவானுக்கு 5 வருஷம்

பெங்களூர் நவம்பர் 30

மைசூர் திவான் சர். மிர்ஸா இஸ்மெயிலுக்கு 1938 ஜனவரி 1வ முதல் 5-வருஷகாலம் பதவி நீடிப்பை மைசூர் மகாராஜா அளித்திருப்பதாகத் தெரிகிறது.

### ஆஸ்பத்திரிக்கு 40,000

மைசூரிலிருக்கும் ஸ்ரீமுக ராஜேந்திர சுவாமி மடாதிபதியானவர் கிருஷ்ணராஜா ஆஸ்பத்திரிக்கு ரூபாய் 40,000 நன்கொடை அளித்திருக்கிருர்.



## காரைக்குடியில் ஜெயப்பிரகாஷ் நாராயண்

காரைக்குடி, நவ. 26.

நேற்றிரவு காரைக்குடி வெற்றி விநாயகர் ஹாலில் அகில இந்திய அபேதவாதக் கட்சி பொதுக் காரியதரிசி திரு. ஜெயப்பிரகாஷ் நாராயண் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசினுர். திரு. எஸ். கணேசன் தலைமை வகித்தார். திரு. ஜெயப்பிரகாசரின் ஆங்கிலப் பிரசங்கம் திரு. ராமமூர்த்தியால் மொழி பெயர்க்கப்பட்டது.

திரு. ஜெயப்பிரகாஷ் நாராயண் பேசுகையில், காங்கிரசுக்கு அபேதவாதம் எதிரானதல்ல வென்றும், 98 சத விகிதமுள்ள குடியானவர்களைக் காங்கிரசுக்குள் கொண்டு வரவேண்டுமானுல் ஜமீந்தாரி முறை அறவே ஒழிக்கப்பட வேண்டுமென்றும், இதுதான் முக்கிய பிரச்னையென்றும், குடியானவர்கள் கட்டுப்பாட்டுடன் இருக்க வேண்டுமென்றும் இளைஞர்கள் தங்களை அபிவிருத்தி செய்துகொள்வதற்கு கட்டுப்பாட்டுடனிருக்க வேண்டுமென்றும் பேசினர். ஸர். ஜே. ஸி. போஸ் மரணத்திற்கு அனுதாபம் தெரிவிப்பதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டவுடன் கூட்டம் முடிவுற்றது.

### ஸ்ரீ கதிரேசன் செய்த ரேடியோப் பிரசங்கம்

பாரதியார் வாழ்வுபற்றி பேசினுர்

(ஒரு நிருபர்)

கொழும்பு, நவ. 28.

ஸ்ரீமான் ஆர். எம். எஸ். எம். கதிரேசன் அவர்கள் சென்ற 7—11—37-ல் நிகழ்த்த வேண்டிய "பாரதியார் வாழ்வும் அவரது பாக்களும்" என்னும் பொருளுரை—அமைந்த ஆகாய வசனிச் சொற்பொழிவை இன்று காலை 10 மணி முதல் ஒலி பரப்பு நிலையத்திலிருந்து பேசலானுர். மேற்படி சொற்பொழிவில் கவியரசர் பாரதியார் பிறப்பு, அவர் தமிழ் நாட்டிற்குச் செய்த தொண்டு, அப்புலவர் கோமகனுர் இயற்றிய பாக்களின் தன்மை இவைகளை மிக நன்ருக எடுத்துச் சொன்னுர்.

ஸ்ரீ கதிரேசன் இதே பொருள் பற்றிய இன்னொரு பிரசங்கம் அடுத்த டிசம்பர் மாஸத்தில் நிகழ்த்துவதற்கு ஒலிபரப்பு நிலையத்தார் ஏற்பாடு செய்திருக்கின்றனர். அந்தச் சொற்பொழிவின் செய்தி பின்னர் தெரிவிக்கப்படும்.

### கோவிலூர் காங்கிரஸ் கமிட்டி

கோவிலூர் 30-11--37

இன்று மாலை 5 மணிக்கு நடைபெற்ற நிர்வாகக் கமிட்டி கூட்டத்தில் பின்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறின:-

1. உலகம் போற்றும் உத்தமர் மகாத்மா காந்தியடிகள் திரேக அசௌக்யப்பட்டிருப்பது கேட்டு மிகவும் வருந்துவதோடு அன்னுர் சீக்கிரமே குணமடைந்து நமக்குவழி காட்டியாக நீடூழி காலம் வாழப்பிரார்த்திக்கிறது.

2. கூடிய சீக்கிரம் கோவிலூரில், காங்கிரஸ் சபையின் சார்பில் கொடியேற்றுவிழா நடத்துவதென்றும் அதனைக் காரைக்குடியிலுள்ள காங்கிரஸ் தலைவர்களைக்கொண்டே நடத்துவதென்றும், தீர்மானிக்கப்பட்டு இரவு 8 மணிக்கு கூட்டம் முடிந்தது.

### 3000 கைதிகள் விடுதலை

லக்னே நவம்பர் 29—

ஐக்கிய மாகாணத்தில் சமீபத்தில் வெளியிடப்பட்ட சர்க்கார் உத்தரவை யொட்டி அடுத்தமாத மத்திக்குள்ளாக முதலாவது கோஷ்டியாக 3000 பேர் விடுதலையாவார்களென்று செய்தி கிடைக்கிறது.

### புதுக்கோட்டை முனிஸிபாலிட்டி

இனி தேர்தல் மூலமே சேர்மன் பதவி

புதுக்கோட்டை முனிஸிபாலிடியின் சேர்மென் பதவியை இதுவரை சர்க்காரே பூர்த்தி செய்து வந்தார்கள்.

நவம்பர் 12வ நடந்த புதுக்கோட்டை சட்டசபைக் கூட்டத்தில் முனிஸிபல் கௌன்ஸிலே இனி தனது சேர்மனைத் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

## இந்தியக் கப்பலுக்கு மூவர்ணத் தேசியக் கொடி

இந்திய கப்பல் சரித்திரத்திலேயே முதன்முதலாக, ஒரு இந்தியக் கப்பல் இந்தியத் தேசிய கொடிதாங்கி, ஸ்ட்ரெயிட்ஸ் செட்டில் மெண்டிலிருந்து புறப்பட்டு இந்துமகா சமுத்திரத்தைக் கடந்து பம்பாய் வந்து சேர்ந்தது.

இதுதான் பம்பாய் நியூடோலோ ஸ்டீம்ஷிப் லிமிடெட் கம்பெனியாரின் "லலிதா" என்ற கப்பல். இக்கம்பெனியார் பம்பாய்க்கும் ஸ்ட்ரெயிட் செட்டில் மெண்டிற்கும் போக்குவரத்து புதிதாக ஏற்படுத்தியுள்ளார்கள். இக்கப்பலின் கம்மாண்டர் இந்தியரே. இதுவே இக் கப்பலின் முதல் பிரயாணமாம்.

### மேலும் பல சுயேச்சை அரசாங்கங்கள்

ஜப்பான்மந்திரியான கோனுயிஇளவரசர் பத்திரிகை பிரதிநிதிகளிடம் பின் வருமாறு தெரிவித்தார்:—

'சீனுவின் பல்வேறு பாகங்களில் ஜப்பான் ஒத்துழைக்கக்கூடிய பல ஸ்தல அரசாங்கங்கள் ஏற்படக்கூடும். ஒரு ஸ்தல அரசாங்கம் சீனுவில் பாதிபாகத்தைத் தனது செல்வாக்குக் குட்படுத்தும் முயற்சியில் வெற்றி பெறுமாயின் அவ்வரசாங்கம் ஸ்பெயினிலுள்ள பிராங்கோ சர்க்காரைப்போல் சீனுவின் மத்திய அரசாங்கமாக அங்கீகரிக்கப்படும்."

ஜனவரி மாதவாக்கில் வட சீனுவில் ஒரு புதிய அரசாங்கம் ஏற்படுத்தப் படக்கூடுமென்றும் கோனுயி குறிப்பிட்டார்.

### வட்டிக்குப் பதில் பெண்களா!

கெய்க்வாரில் பெண்கள் விற்பனை

கெய்க்வாரைச் சேர்ந்த ஸையித்பூர் என்ற விடத்தில் பண லேவாதேவி செய்பவர்கள் பெரும் தொகை வட்டி வசூலிக்கின்றனராம். சிலகடன்காரர்களால் வட்டியே கொடுக்க முடியாமல் இருப்பதால் தங்களுடைய பெண்களை அந்தப் பணலேவாதேவிக்காரரிடத்தில் வட்டிப்பணத்துக்காக விற்று விடுகின்றனர். இதுவரை நூற்றுக் கணக்கான பெற்ருேர் இவ்வண்ணம் வட்டித் தொகை தரமுடியாமலும் கடன்பணம் கட்ட முடியாமலும் தங்கள் பெண்களை விற்று விட்டிருக்கின்றனர்.

### நீல் சிலையை அகற்றினது அவமதிப்பு!

காமன்ஸில் சீற்றம்

லண்டன் நவ 29—

இன்று காமான்ஸ் சபையில் ஸர் ஆல்பிரட் நாக்ஸின் கேள்விக்கு உதவி இந்தியா மந்திரியான லார்டு ஸடான்லி பதிலளிக்கையில் பின் வருமாறு தெரிவித்தார்:—

"சமீபத்தில் சென்னையில் ஒருஸ்தா சந்தியிலிருந்து அகற்றப்பட்ட ஜெனரல் நீலின் சிலையை வேறு எந்த இடத்தில் நாட்டலாமென்பதுபற்றி இந்திய சர்க்கார் ஆலோசித்து வருவதாகத் தெரிகிறது"

அவமதிப்பு!

அச்சிலையை அகற்றியது ஒரு பிரபல பிரிட்டிஷ் ஜெனரல்பற்றிய ஞாபகத்தை அவமதித்ததாகும். இவ்வமதிப்பை தடுக்க கவர்னருக்கு அதிகாரமில்லையா"?

என அட்மிரல் டேலர் கேட்டார்.

"அந்தச் சிலை ஒரு மியூஸியத்துக்கு அனுப்பப்பட்டு விட்டதென்பது உண்மையேயாயினும் இதுபற்றி அட்மிரல் டேலர் கூறியதற்குத் தக்க ஆதாரமிருப்பதாக நான் எண்ணவில்லை" என்லார்டு ஸ்டான்லி பதிலளித்தார்.

## கல்யாணமும் ஜாதகப்பொருத்தமும்

இதே தலைப்பில் 25—11—37 குமரன் 12-வது பக்கத்தில் தனவணிகன் என்ற பெயரில் எழுதப்பட்டிருக்கிற விஷயமானது என்னுல் எழுதப்பட்டது. நான் ஷெயார்களின் துஸ்ட்டி வீட்டிற்கு துக்கம் விசாரிக்க போனபோது நிகழ்ந்த நிகழ்ச்சிகளை கொண்டும் இம்மாதிரியான பரிதாபகரமான சம்பவத்தில் ஒன்று மறியாத பெண்கள் அகப்பட்டுத் தவிக்கும்படி இச்சமூக வழக்கம் இருந்து வருவதைக் கண்டு யேற்பட்ட வருத்தத்தாலும் இக்கட்டுரையை எழுதினேன். ஆனுல் அக்குடும்பத்தாருக்கு இக் கட்டுரையானது மன வருத்தத்தை யுண்டுபண்ணியிருப்பதாகத் தெரியவருகிறது. என்னுடைய அந்தரங்க சுத்தியாக அக் குடும்பத்தார் மீது குறை கூற வேண்டு மென்ற எண்ணம் எனக்கு கிடையாது. தவிர அக் குடும்பத்தார் எனக்கு உறவினராகவும் வேண்டியவர்களாகவும் இருப்பதனுல் அவர்கட்கு ஏதாவது அவமானம் ஏற்படுகிற பக்ஷத்தில் அது எனக்கும் பங்குள்ளதென்றே கருதுகிறேன் இருந்தபோதிலும் இக்கட்டுரையின் பொருட்டு அவர்கள் வருத்தப்படுவதாக நான் அறிவதால் இக்கட்டுரையை வெளியிட்டதற்காக எனது வருத்தத்தை அக்குடும்பத்தாருக்கு நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

நா. அருணுசலன்,
கண்டவராயன்பட்டி,

குறிப்பு:— குடும்பத்தில் கவலை ஏற்பட்டுள்ள இச்சந்தர்ப்பத்தில் மற்றவர் அவர்கட்கு ஆறுதல் ஏற்படும்படி செய்வது அவசியமாகும். ஆனுல் இது சம்பந்தமான பிரஸ்தாப கட்டுரையானது அவர்களுடைய வருத்தத்திற்கு இடமளிக்கும்படி வெளியானதற்கு நாம் மிகவும்வருந்துகிருேம்.

பத்திராதிபர், குமரன்.

### சுகாதார பிரசங்கம்

காரைக்குடி சொக்கலிங்கம் சுகாதார நிலையத்தில் 5—12—37-ம் தேதி மாலை 5-30 மணிக்கு முனிசிபல் கமிஷனர் டி. புருஷோத்தம முதலியார், பழ. நாச்சியப்பன், ஹெட்மாஸ்டர் சுந்தராமன் முதலியவர்கள் சுகாதாரம் பற்றி உபந்நியாசிப்பார்கள். இம்மாதிரி ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமைகளிலும் பல அன்பர்கள் உபந்நியாசிப்பார்கள்.

### ஆண்டு விழா

காரைக்குடி ஸ்ரீ மீனுக்ஷி பெண்பாடசாலையின் 19-20ம் ஆண்டு நிறைவு விழா 7—12—37ம் தேதி மாலை 2-30 மணிக்கு பாடசாலையில் ராமனுதபுரம் ஜில்லாகலெக்டர் E. பென்னட்அவர்கள் தலைமையில் நடைபெறும். ஸ்ரீமதி E. பெனட் அவர்கள், பரிசுகள் வழங்குவார்கள். அவ்வமயம் மாணவ மாணவிகள் பாட்டு பேச்சு நடிப்பு முதலியன நடைபெறும்.

### அவதூறு வழக்கில் ஆட்கள் வரவில்லை

டாக்டர் சுப்பிரமணிய ஐயரும் திரு ரெங்காமானுஜ ஐயங்காரும் தனித்தனியாக திரு. சித. நா. கி. நாராயணன் செட்டியார் திரு. மு. ராம. பெரியணன் செட்டியார் ஆகியவர்கள் பேரில் அவதூறு வழக்கு தாக்கல் செய்திருந்த செய்தி ஏற்கனவே வெளியாயிருக்கிறது. நவம்பர் 29வ அருப்புக்கோட்டை வாயிதாவிற்கு ஒருவரும் ஆஜராகவில்லை ஆதலால் மனுக்கள் தள்ளப்பட்டன, என்று ஒரு நிருபர் அறிவிக்கிருர்.

### கல்வி போர்டு ரத்து

செகண்டரி கல்வி போர்டுகளை டிசம்பர் 1வமுதல் ரத்து செய்து விட்டதாக சென்னை சர்க்கார் உத்தரவிட்டிருக்கிருர்கள்.

## தந்திச் செய்தி

### சிங்கப்பூர் மார்க்கெட்

(ஸ. கி. தந்தி)

நவம்பர் 29வ

ரப்பர் பீக்கல் முப்பத்தொரு வெள்ளி பதினுறரைக் காசு.

### கொழும்பு ரப்பர்

கொழும்பு, நவ. 29.

| | |
|---|---|
| ரப்பர் கிரேப் ராத்தல் 1-க்கு | 35 |
| ரப்பர் ஷீட் " " | 33¾ |
| ரப்பர் கூப்பன் | 24½ |
| தேயிலை கூப்பன் | 40½ |

### லண்டன் மார்க்கெட்

ரப்பர் விலை

நவம்பர் 29வ

ராத்தல் ஒன்றுக்கு 7½ பென்ஸ்.

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திற்கும் பினங்குக்கும்

(ஏஜண்டினிடமிருந்து)

புறப்படுதல்

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா | 4—12—37 |
| ரோனு | 18—12—37 |

வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ரோனு | 9—12—37 |
| ரஜூலா | 23—12—37 |

### சென்னை மார்க்கெட்

சென்னை, நவம்பர் 30வ

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத்தங்கம் | 34 | 6 | 6 |
| ஷை வாயிதா | 34 | 8 | 0 |
| மூலா தோலா 1-க்கு | 34 | 0 | 6 |
| சவரன் மொத்தம் | 22 | 6 | 6 |
| ஷை சில்லறை | 22 | 7 | 0 |
| வெள்ளி 100 ரூ. எடை | 51 | 0 | 0 |
| ஷை ரூ. 1 எடை | 0 | 8 | 6 |

### ரெங்கூன் மார்க்கெட்

(நமது நிருபர் தந்தி)

ரெங்கூன், டிசம்பர் 1வ

| | |
|---|---|
| பெரிய மில் ஸ்பெஷல் | 232—8 |
| ந. செய்ன் சின்னமில் | 245 |
| மீடோன் பஜார் | 262-8-265 |
| ரெடி புழுங்கலரிசி மார்க்கெட் லாங் | 297-8 |
| மில்சார் | 250, 257-8 |
| புல்பாயில்டு | 227-8-235 |

### ஒ. சிறுவயல் சேவாசமிதி

பாய்ஸ் ஸ்கவுட் அசோஸியேஷன் நகரத்தார் ட்ரூப்

இவ்வூர் சாரணர்கள் 26—11—37 குன்றக்குடிக்கடுத்த சண்முகநாதபுரத்தில் ஆத்தங்குடி திரு.பெரி.அரு. அருணுசலஞ்செட்டியார்வர்கள் தலைமையில் காம்ப் ஆரம்பித்து 28—11—37 மாலை 6 மணிக்கு குன்றக்குடியில் புதுக்கோட்டை ரிட்டயர்டு இன்ஸ்பெக்டர் திரு. கே. வெங்கிட்ராம அய்யர் அவர்கள் தலைமையில் காம்ப் முடிவு விளையாட்டுகள் நடத்தினர்கள். ஷை விளையாட்டுகளை திரளான ஜனங்கள் கண்டு களித்தார்கள். கௌரவ மாஜிஸ்ட்ரேட் வி. சிவராமய்யர் அவர்கள் ஸ்கவுட்டினுல் ஏற்படும் நன்மைகளை எடுத்துச் சொல்லி ஷை ஸ்கவுட் நிதிக்காக நன்கொடையும் அளித்ததுடன் சர்டிபிகேட் ஒன்றும் கொடுத்தார் என்று காரியதரிசி எழுதுகிருர்.

### தேவகோட்டை
### 14-வது வார்டு வரி கொடுப்போர் சங்கம்

(ஒரு நிருபர்)

நவம்பர் 22—

இன்று மாலை ஐந்து மணிக்கு வெ. நா. மு. தண்ணீர்பந்தலில் 14வது வார்டு வரிச் செலுத்துவோர் பொதுக்கூட்டம் உயர்திரு வ. பெரி. மு. கரு. முத்தையா செட்டியார் தலைமையில் கூடிற்று. அச் சமயம் பிரஸ்தாப வார்டில் சொத்து வரி தொழில் வரி செலுத்துபவர்களின் உரிமையையும் நன்மையையும் பாதுகாப்பதற்கு சங்கம் வேண்டியதின் அவசியம் பற்றியும் விதிக்கப்பட்டிருக்கிற அதிகமான வரிகளைக் குறைக்கவேண்டுமென்பதுபற்றியும் அன்பர் பலர் பேசினார்கள். பின்னர் தலைவர் வக்கீல் V. ராமசாமி அய்யங்கார். உபதலைவர் பழ.ப. பழனியப்ப செட்டியார், காரியதரிசி சுப. நாக. நாகப்ப செட்டியார் உபகாரியதரிசி V. கணபதி சுப்பிரமணிய அய்யர் பொக்கிஷதார் பழ. சு அ. பழனியப்ப செட்டியார் மற்றும் ஐந்து நிர்வாக அங்கத்தினர்களைக்கொண்ட கமிட்டி அமைக்கப்பெற்று வந்தன உபசாரத்துடன் கூட்டம் முடிவுற்றது.

### தேவகோட்டை
### 15-வதுவார்டு வரி செலுத்துவோர்சங்கம்

நவம்பர். 25—

தேவகோட்டை முனிஸிபாலிட்டியில் சொத்து வரி தொழில் வரி செலுத்துபவர்களின் உரிமைகளையும் நன்மைகளையும் பாதுகாப்பதுடன் அதிக வரிகளைக் குறைப்பது சுகாதாரம் சீர்திருத்தம் முதலியவைகளை விர்த்தி செய்வது வரி செலுத்துவோரின் நன்மைக்காக எல்லாத்துறைகளிலும் உழைப்பது என்பன வற்றை நோக்கமாகக் கொண்டு (24—11—37) மாலை 6 மணிக்கு பன. கரு. மு. முத்துக்கருப்பன் செட்டியார் அவர்கள் தலைமையில் 15 வார்டு வரி செலுத்துவோர்கள் ஒரு பொதுக்கூட்டங் கூடி "தேவகோட்டை 15-வது வார்டு வரி செலுத்துவோர் சங்கம்" என்ற பெயரால் ஒரு சங்கம் ஸ்தாபித்து ஸ்ரீமான் S. லெக்ஷிமிரதன் பாரதி M. A. B, L தலைவராகவும் ஸ்ரீமான் வீர. அள. அளகப்ப செட்டியார் உப தலைவராகவும் வயிநாகரம் வே. இராமநாதன் செட்டியார் காரியதரிசியாகவும் எ. பெரி எ. இ. நா. நாச்சியப்ப செட்டியார் உபகாரியதரிசியாகவும் செ. அரு. சு. அரு. மீனாக்ஷிசுந்தரம்செட்டியார் பொக்கிஷதாராகவும், (1) மு. பெரி. மு. அண்ணாமலை செட்டியார் (2) நா. நல்லபெருமாள்ஆச்சாரி (3) ராம. முத்தய்யா சேர்வை (4) ஆருமுகக் கொத்தன் (5) வயிபெத்தன் ஆகிய ஐவரும் நிர்வாக அங்கத்தினர்களாகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றார்களென்று காரியதரிசி அறிவிக்கிறார்.

---

(7-ம் பக்கத் தொடர்ச்சி)

மேலும் நோக்கர், எண்ணம் இவைகளைப்பற்றி தீர்மானத்தில் கண்டிக்கப் படவில்லை. செய்கையைப்பற்றித்தான் கண்டிக்கப்படுகிறது. தேசியக் கொடியை மனப்பூர்வமாக இல்லாமல் செய்கையளவில் அவமரியாதை செய்த காரணத்தால்தான் கண்டிக்கப் பட்டது. நோக்கத்தோடும், எண்ணத்தோடும் அவமரியாதை செய்யப்பட்டிருந்தால் தீர்மானம் வேறு ரூபத்தில் வந்திருக்கக்கூடும் என்பதை இந்த இடத்தில் விவரிக்காமல் இருக்கமுடியவில்லை.

தீர்மானம் பெரும்பான்மையான வோட்டுக்களால் நிறைவேற்றப் பட்டிருப்பதிலிருந்து என்ன தெரிய வருகிறதென்றால் ஒருசில சூழ்ச்சிக்காரர்களின் சூழ்ச்சிக்காக இது நிறைவேறவில்லை என்பதும், தேசியக்கொடியானது கொடி ரூபத்தை அடைந்து எந்த இடத்தில் கட்டப்பட்டிருந்தாலும், வைக்கப்பட்டிருந்தாலும் மரியாதை செலுத்தப்பட வேண்டியதுதானென்றும், தவறுதலாக கொடியை துஷ்பிரயோஜனப் படுத்திவிட்டு அதற்காக எத்தனையோ பேர்கள் சொல்லியும் வருத்தம்கூட தெரிவித்துக்கொள்ள மறுத்த ஒரு நபரை அவர் எவ்வளவு தியாகம் செய்தவராயிருந்தாலும் கண்டிக்கத்தக்க செய்கையாமென்றும், மற்றைய காங்கிரஸ்காரர்களை கொடி விஷயத்தில் உஜார்படுத்தியும் இருக்கிறது என்பது எமது அபிப்பிராயம்.

## கடிதங்கள்

### வெற்றியூர்
### "திருமகள் வாசகசாலை" திறப்புவிழா

(ஒரு நிருபர்)

நவம்பர் 23—

இன்று இவ்வூர் நகரக் கட்டிடத்தில் "திருமகள்" வாசகசாலை திறப்புவிழா நடைபெற்றது. பல அன்பர்கள் விஜயம் செய்திருந்தனர். அரு. மு. மு. முத்துக் கருப்பன் செட்டியாரவர்கள் வாசகசாலையைத் திறந்துவைத்து, வாசகசாலை ஸ்தாபிப்பதற்கு உதவியளித்த அன்பர்களைப் பாராட்டியும், எல்லோரும் வாசகசாலையை நன்கு பயன்படுத்திக் கொள்ளவேண்டுமென்றும், அங்கத்தினர்களாக யாவரும் சேர்ந்து ஆதரிக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார்கள். வந்தனோபசாரத்துடன் விழா இனிது நிறைவெய்தியது.

### செட்டியார்கள்
### நல உரிமைச் சங்கம்

காரைக்குடி

இச்சங்கத்தின் 3-வது ஆண்டு 4-வது நிர்வாக சபைக்கூட்டம் உபதலைவர் ஸ்ரீமான் முரு. நா. முருகப்ப செட்டியாரவர்கள் தலைமையில் 28-11-37 மாலை 5-மணிக்கு சங்க நிலையத்தில் நடைபெற்றது. கணக்குகளையும் புது அங்கத்தினர்களையும் ஒப்புக்கொள்ளப்பெற்றது

"பிரபல இந்திய விஞ்ஞான சாஸ்த்திரிஸர். ஜே. ஸி. போஸ் அவர்கள் காலமானதற்கு இச்சங்கம் அனுதாபப்படுகிறது.

"வடக்கு இராமநாதபுரம் ஜில்லா போர்டாருக்கு கானாடுகாத்தான் S. A. குடும்பத்தார் லெக்ஷம் ரூபாய் பெறுமதியுள்ள கட்டிடம் இனாமளித்திருப்பதை இச்சங்கம் பாராட்டுகிறது"

"பூலாங்குறிச்சி ஆஸ்பத்திரிக்கு திருவாளர் வ, சொ. ராம. வள்ளியப்ப செட்டியாரவர்கள் இருபதினாயிரம் ரூபாய் நன்கொடையளித்திருப்பதை இச்சங்கம் பாராட்டுகிறது

ரோடுகள் போடுவதற்காக பலஊர் நகரத்தார்கள் ஜில்லா போர்டார் வசம் ரூபாய் எழுபதினாயிரம் வரை நன்கொடையளித்திருப்பதைக்கண்டு நன்கொடையாளர்களை இச்சங்கம் பாராட்டுகிறது"

'ஆஸ்பத்திரிக்காக நன்கொடை பெறும் பெரிய பெரிய கட்டிடங்களை நிர்வகிக்கப் பணமில்லாமல் பெற்றுக்கொள்வதைக் காட்டிலும் ஆஸ்பத்திரிக்குப்பதிலாக செலவிடும் பணத்தை பொதுஜன சுகாதாரத்தைப்பரப்பும் முறைகளில் செலவிடுவது நலமென கனம் மந்திரி டாக்டர் ராஜன் அவர்கள் திருப்பத்தூர் ஜில்லா போர்டு வரவேற்புக் கூட்டத்தில் கூறியிருப்பதால் கானாடுகாத்தான் S. A. குடும்பத்தார் உதவியிருக்கும் ஒரு பெரிய கட்டிடத்தையும் விரிந்த இடத்தையும் வடக்கு இராமநாதபுரம் ஜில்லாவுக்கே ஓர் தலைமையான சுகாதாரக்காட்சி நிலையமாக (மியூஸியம்) வைத்து அழகிய பூந்தோட்டமும் (பார்க்) விளையாட்டுகள் தேசப்பயிற்சி சாதனங்கள் முதலியனவும் ஏற்படுத்தும்படி வடக்கு இராமநாதபுரம் ஜில்லா போர்டாரையும் நன்கொடையாளர் S. A குடும்பத்தாரையும் இச்சங்கம் கேட்டுக் கொள்வதுடன் இதை கனம் மந்திரி டாக்டர் ராஜன் அவர்கட்கும் தெரிவித்துக் கொள்ளுகிறது"

'சமீபத்தில் இந்நகர் முனிஸிபாலிட்டியில் ஹரிஜன் மெம்பர் திருவாளர் S. பழனி அவர்களைத் தலைமை வகிக்குமாறு அன்பர் அரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்கள் பிரரேபிக்க அதற்குப் பாதகமாக 10 அங்கத்தினர்கள் ஓட்டளித்து ஒடுக்கப்பட்ட வகுப்புப் பிரதிநிதிக்கு சந்தர்ப்பம் அளிக்காது விடுத்ததையும் இதில் காங்கிரஸ்காரர்களில் இரு பிரதிநிதிகளும் சேர்ந்து ஓட்டளித்ததையும் கண்டு இச் சங்கம் வருந்துகிறது,

"இந்நகரில் சில இடங்களில் சீட்டாட்டக் கழகங்கள் நடைபெற்று வருவதால் தனவணிக மக்கள் பலர் பல ஆயிரக்கணக்கான பொருள் நஷ்டப்பட்டு இன்னலுறுவதால் இதை உடனே சோதனையிட்டு ஆவன செய்யும்படி போலீஸ் அதிகாரிகளையும் மேலதிகாரிகளையும் கேட்டுக் கொள்ளுவதுடன் இதை ஒழிக்கும் வழியில் நமது சங்கமும் வேண்டும் உதவிகள் போலீசுக்குச் செய்கிறது,'

இத்துடன் கூட்டம் 7-மணிக்கு முடிவெய்தியது என்று காரியதரிசி பனை. மெ. மெ. பழ. வெங்கிடாசலம் செட்டியார் தெரிவிக்கிறார்.

### ஆவினிப்பட்டி
### விவேகானந்தர் கல்விக் கழகம்

நவம்பர் 25—

இன்று இக்கழகத்தின் பதினோராம் ஆண்டு ஐந்தாம் மாதக்கூட்டம் முன் தலைமையாசிரியா யிருந்தவரும், திண்டுக்கல் வாசியுமான உயர்திரு. எஸ். முத்துப்பிள்ளை அவர்கள் தலைமையின்பால் மாலை 3-30 மணிக்கு கூட்டப்பெற்றது. இரு மாணவர்களால் இன்னிசையுடன் இறை வணக்கம் பாடப்பெற்றதும், கடந்த நான்காம் மாதக் கூட்டம் விசேஷக் கூட்டம் ஆகியவற்றின் நிகழ்ச்சிகளை மாணவன் MR. சுவாமிநாதன் வாசித்தான். பின்னர் தலைவரவர்கள் முன்னுரை இயம்பினார்கள். மாணவி A. சிந்தாமணி "சிற்றில் சிதையேல்" என்பது பற்றியும் மாணவன் R. இராஜம் "அன்பு" என்பது பற்றியும் உரையாடினார்கள். தலைவரவர்கள் தமது கருத்துரையில் பொருளாதார நிலைமைகுறித்து மிக அழகாகச் சிறந்தவொரு சொற்பெருக்காற்றினர். பின் வந்தனோபசாரங் கூறியதும் S. P. இராமசாமி, மாரிமுத்து என்ற மாணாக்கர்களின் மங்கள வாழ்த்துடன் கூட்டம் இனிது கலைந்தது,

### அ. சிறுவயல்

இவ்வூர் கி·கா-சபையின் மாதக்கூட்டம் சபைத்தலைவர் திருவாளர் கா. அரு. சு. சுப்பையா செட்டியார் அவர்கள் தலைமையில் 29—11—37 காலை 10½ மணிக்கு விவேகானந்த வாசகசாலையில் கூடியது கீழ்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன:—

இந்த கிராமத்தில் குப்பை கூட்டுவதற்காக ஒரு தோட்டியை நியமிக்க வேண்டுமென்று ஜில்லா போர்டுக்கு சிபார்சு செய்யும்படி தா- கா கமிட்டியையும், ஜி.கா கமிட்டியையும் கேட்டுக்கொள்கிறது.

தா. கா. கமிட்டி ஜி. கா. கமிட்டிமுதலியவைகளுக்கு தலைவர் காரியதரிசி பொக்கிஷதார் முதலிய உத்தியோகஸ்தர்களை தேர்ந்தெடுக்கும் தேர்தல்களில் கிராம காங்கிரஸ் கமிட்டிகளையும் கலந்து, கிராம காங்கிரஸ் கமிட்டியார்களுக்கு இது விஷயங்களில் ஓட்டுரிமை அளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறது.

இந்த கிராமத்து வீதிகளில் விளக்குகளே இல்லை. ஆகவெ வீதிகளில் விளக்குப்போட ஜில்லா, போர்டுக்கு சிபார்சு செய்யும்படி கா-கி-யையும் ஜி,கா-க-யையும் கேட்டுக் கொள்கிறது.

### கூழிபிறை
### சீர்திருத்த திருமணம்

இவ்வூர் மு. ப. சொ. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் குமாரனும் பாரதாபிமான சங்கத்தின் மாஜி காரியதரிசியுமாகிய முந்துப்பழநியப்ப செட்டியாருக்கும் நச்சாந்துப்பட்டி சி. பெ. சி. சின்னையா செட்டியாரவர்கள் குமாரத்தி அடைக்கம்மைக்கும் நாளது ஐப்பசிமீ 30 உ சிறப்பாக திருமணம் நிறைவேறியது. இத்திருமணத்தில் மணமகனே நேரில் சென்று திருமங்கலியதாரணம் செய்தது குறிப்பிடத்தக்கது.

இனி நடைபெறும் திருமணங்கள் யாவற்றிலும் மணமகனையே தாலி கட்டும்படி ஏற்பாடு செய்யும்படி சமூகப் பெரியோர்களை கேட்டுக்கொள்ளுகிறேன் என்று ராம. திரு. வீரப்பா எழுதுகிறார்.

### காரைக்குடி

28—11—37உ மாலை 6-30 மணிக்கு திருவாளர் Dr. K. R. ரெத்தினசாமி M.B. B.S. (Vienna) அவர்கள் தலைமையில் 4, 5-வது மாதக் கூட்டம் நடைபெற்றது. தலைவர் முன்னுரைக்குப்பின் தலைவரவர்களால் சமீபத்தில் நடந்த பாட்மிண்டன், காரம் போர்டு பந்தய விளையாட்டுக்களில் வெற்றியடைந்தவர்களுக்கும் (Winners); கடைசியாகத் தோல்வி யடைந்தவர்களுக்கும் (Runners) வெள்ளி மெடல்கள் பரிசாக அளிக்கப்பட்டன. பிறகு Dr.R பீம்சிங் அவர்களும் அபிசீனியா சுமு. பழ. நாச்சியப்பச்செட்டியார் அவர்களும் சொற்பொழிவாற்றினார்கள். தலைவர் முடிவுரைக்கு பின் காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறப்பட்டு கூட்டம் இரவு 8-மணிக்கு இனிது முடிந்தது என்று காரியதரிசி A. L. அளகப்பன் தெரிவிக்கிறார்

### கண்டரமாணிக்கத்தில்
### வந்தனோபசார சிற்றுண்டி விருந்து

(ஒரு நிருபர்)

சென்ற 28—11—37, ஞாயிற்றுக்கிழமை மாலை ஸ்ரீ தண்டாயுதபாணி ஸ்கூல் போஷகரும் மானேஜருமான திரு. பெரி. பெரி. சுப. நாராயணஞ் செட்டியாரவர்கட்கு இந்நகரின் கண் ஓர் உயர்தர ஆரம்பப் பாடசாலை நிறுவி யிருப்பதை பாராட்ட ஷையூர் நகரத்தார்கள் ஓர் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தும், ஒரு சிற்றுண்டி விருந்தும் நடத்தினார்கள்.

சுமார் 2 மணிக்கு நகர விடுதியிலிருந்து நகரத்தார்கள், கொடிவிருதுகளும், சாரணச் சிறுவர்களும், காங்கிரஸ் தொண்டர்களும் புடை சூழ பாண்டு, மேளம் முதலியவைகளுடன் திரு. நாராயணஞ் செட்டியார் வீட்டிற்குப் போய் அவர்கட்கும் அவர்கள் சகோதரர் திரு. பெரி. பெரி. சுப. பெரிய கருப்பஞ் செட்டியாரவர்கட்கும் மாலையிட்டு கடை வீதி வழியாக திரு. பழ. சுப, லெ. கருப்பஞ் செட்டியார் அவர்கள் பங்களாவிற்த ஊர் வலமாக அழைத்துச் செல்லப் பட்டனர்.

அவண் கூட்டம்' திரு. செ. சி, நா. லெக்ஷ்மணன் செட்டியாரவர்கள் தலைமையின் கீழ் கூடியது. மாணவ மாணவிகளால் கடவுள் வணக்கம் பாடப் பெற்று கூட்டம் ஆரம்பிக்கப்பட்டது. பின்னர் தலைவர் முகவுரையாக திரு. நாராயணஞ் செட்டியார் அவர்களும் அவர்கள் குடும்பத்தார்களும் செய்து வரும் வித்தியா தானத்தைப் புகழ்ந்து இவ்விதமான ஒருவிருந்து நடத்துவது நகரத்தார்கள் கடமை யென்றும் பேசினர். பிறகு திரு. சாமிநாதஞ் செட்டியாரவர்கள் உபசாரப் பத்திரம் வாசித்துக் கொடுத்தார்கள்.

அதன் பின் கனம் திரு. வி. சா. காசிச் செட்டியாரவர்கள் 'ஐக்கிய சங்கத்தின் சார்பாக' "வித்தியாலை நாராயணன் செட்டியார்" என்ற பட்டப் பெயரை அவருக்களித்தனர். அதை ஆதரித்துப் பலர் பேசினர். திரு. நாராயணன் செட்டியார் அவர்களும் ஏற்ற முறையில் பதில் கூறினர்.

மற்றும் மதுரை வக்கீல்களான ராவ் பகதூர் R. நரசிம்ம அய்யங்கார் அவர்களும் கனம் ராமச்சந்திர அய்யர் அவர்களும் வந்து திரு. மானேஜர் அவர்களையும், ஸ்ரீ தண்டாயுதபாணி வித்தியாசாலையையும், அதன் தலைமை ஆசிரியர் திரு. P. சுப்ரமணிய அய்யர் அவர்களையும் பாராட்டிப் பேசினர்.

கடைசியாக கீதம் பாடிய பின்னர் புகைப்படம் எடுக்கப்பட்டது, சுமார் ஆயிரம் பேருக்கு சிற்றுண்டி வழங்கப்பட்டது. இறுதியில் பாஞ்சோ கச்சேரியுடன் இரவு மணி 7-க்கு கூட்டம் இனிது முடிந்தது.

### சூரக்குடியில் போஸ்டாபீஸ்
### திறப்பு விழா

சூரக்குடி 27-11-37—

இவ்வூரில் ஒரு பிராஞ்சு தபாலாபீஸ் இன்று காலை 12 மணிக்கு போஸ்டாபீஸ் இன்ஸ்பெக்டர் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது,

இனிமேல் லெட்டர் எழுதும் நன்பர்கள் M. சூரக்குடி Via திருப்பத்தூர் இராமநாட் ஜில்லா என்று எழுதவேணுமாய்க் கேட்டுக் கொள்கிறேனென்று வெ. சுப. சுப்பிரமணியஞ் செட்டியார் அறிவிக்கிறார்.

---

## நோட்டீஸ்

சிவகெங்கை
டி. மு. கோர்ட்டு

S. C. No 572—37.

அரு. அ. ஆண்டியப்ப செட்டியார் } வாதி

பெரி. சேவுகன் } பிரதிவாதி

வாதி புரோநோட்டுப்படிக் குள்ள தொகையை வரப்பற்ற பிராது செய்து விசாரணைக்கு வருகிற டிசம்பர்மீ 10உ வாயிதா யேற்பட்டிருக்கிறது. ஷை வாயிதாவுக்குப் பிரதிவாதி ஆஜராகா விட்டால் எக்ஸ்பார்ட்டியாக தீர்மானமாகி விடும்.

S. Sundara Raja Iyengar, அட்வகேட்

சிவகெங்கை 29—11—37



(6-ம் பக்கத் தொடர்ச்சி)

எழுந்து நின்று அம் மங்கையை நோக்கி அம்மணீ தங்களின் பெருந்தன்மைக்கு எனது தாழ்மையான வந்தனங்கள். எந்தனுடைய வறுமையான நிலையில் தங்களுக்கு நான் ஒரு கைமாறும் செய்ய சக்தியற்றவனாய் இருக்கிறேன். தாங்கள் கடவுள் அருள்பெற்று நீடூழிகாலம் இந்நிலத்தில் வாழவேண்டுமாய் எல்லாம் வல்ல இறைவனை என் மனமார வேண்டுகிறேன் என்று நாவு குழற தடுமாற்றத்துடன் கூறிமுடித்தான் தளர்வு நீங்கிய வாலிபன்.

அவனது நிலையை கவனித்த காரிகையாள் அகத்தினழகை முகத்தில் அறிந்துகொண்டு அவ்வாலிபனை நோக்கி 'ஐயா தாங்களெந்தவூர்? ஏன் இவ்வழியில் வந்து களைத்து விட்டீர்கள்? தங்களுக்கென்ன நேர்ந்தது? தங்களைப் பார்க்கின் உயரிய கல்வித்திறன் உள்ளவர் போல் தோன்றுகின்றது தங்கள் வரலாறென்ன?' என்று வினவினாள்.

அதற்கு அவ்வாலிபன் 'தயை தாக்ஷிண்யமே உருவாய் அமைந்த தையலே நான்இதே ஊர் தான். தெற்கு தெருவிலுள்ள ஒரு சிறுவீட்டில் நானும் என் தாயும் வசித்து வருகிறோம். நான் இளம் பாலகனா யிருக்கும் பொழுதே எனது தந்தை இறந்து விட்டாராம். எனக்கு வேறு சகோதரர்கள் கிடையாது. ஆகையால் பிற்கால வாழ்க்கையை கருதி என் தாய் என்னை கல்வி பயிலவைப்பதற்காக என் தந்தை வைத்து விட்டுச்சென்ற சிறிது ஆஸ்தியையும் தானணிந்திருந்த அணிகளையும் கொண்டு என்னை நன்றாய் படிக்க வைத்தாள். எங்கள் நிலைமை மிகவும் கஷ்டத்திற்குள்ளாய் விட்டது. நான் படித்த பயன் எங்கும் வேலையகப்படவில்லை. ஆதலால் நாள் தோறும் சென்று எங்காகிலும் கூலிவேலை செய்து அன்றைய சம்பளத்தைக்கொண்டு உணவிற்கு வழி தேடுவேன். இப்படியே சிலகாலமாய் எங்கள் குடும்பம் வறுமைநிலையிலிருந்து வந்தது. இன்றைய தினம் எனக்கு ஒருஇடத்திலாவது வேலை அகப்படவில்லை. காலை முதல் என் தாய் பட்டினி கிடப்பாள் அவளுக்கு ஆறுதல்கூற வகையறியாது தவிக்கின்றேன். கடவுள் எங்களுக்கு இன்று விட்ட வழி அவ்வளவு தான் வருந்துவதால் பயனில்லை.'

'அம்மா பொழுது போய் விட்டது நான் சென்றுவருகிறேன். தாங்கள் செய்த புண்ணியத்திற்கு மிகவும் எனது மனமார்ந்த வணக்கத்தை தெரிவிக்கின்றேன்' என்று பணிவாகக்கூறி எழுந்திருந்தான் வாலிபன்.

'வாலிபனின் வரலாற்றைக்கேட்ட நிந்த வனிதை அவன்மீ திரக்கங்கொண்டு பரிதாபத்துடன் அவனது முகத்தை உற்று நோக்கினாள். வாலிபனே தான் வீடு சென்று தன் அன்னைக்கு என்ன பதிற் சொல்வது? அவள் இரவு சமைப்பதற்காக அடுப்பு பற்ற வைத்து விட்டு என்வரவைநோக்கியிருப்பாளே. ஐயோ அவளுக்கு நான் ஏமாற்றமா கொடுப்பது? ஆ ஜெகதீசா என்று மனதிற்குள் பலவாறு வருந்திக்கொண்டு நின்றான். அவன் வாட்டத்தைக்கண்ட வடிவழகி மிக்க இரக்கத்துடன் ஐயா நீர் நன்றாக படித்திருந்தும் ஏன் அன்றாடம் கூலி வேலைசெய்து ஜீவிக்கவேண்டும்? ஏதாவதொரு வீட்டில் வேலைக்கமர்ந்துகொள்வதுதானே எனக்கூறினாள்.

'தாங்கள் கூறுவது நியாயந்தான். நானும் இவ்வூரில் எவ்வளவோ வீடுகளில் வேலைக்காகச்சென்று அலைந்தேன்.

## அருமை நாதன்
### (அல்லது)
## அதிசயபுரியின் அகோரக்கொலை

ஒவ்வொரு இடத்திலும் தற்போது ஆள் தேவையில்லை யென்றும் சிலநாள் சென்றுவா என்றும் கூறிவிட்டார்கள். மண் வெட்டிச் சுமந்தோ மூட்டை தூக்கியோ வேறு எந்தவேலையாயினும் சரி செய்வோ மென்றாலோ அதுவும் கிடைப்பதரிதாயிருக்கிறது. இனி நானென்ன செய்வேன்' என்றுரைத்தான். ஆம் இத்தகைய கல்வியும் பெருமையும் உள்ளவர்களுக்கு இக்காலத்தில் வேலை கிடைப்பது மிகவும் அரிதாயிருக்கிறது. இதற்கெல்லாம் காரணம் யாதெனில் ஏராளப் பணம் உடையவர்கள் ஏழைகளிடம் இரக்கம் காட்டாததுதான். இரவு போஜனத்திற்கும் வழியில்லை என்கையில், என் உள்ளம் பதைக்கின்றது. தங்களுடைய பொறுமைக்கும் மேன்மையான குணத்திற்கும் கடவுள் குறையொன்றும் வைக்கமாட்டார். வீணாய் வருந்தி மனதை புண்படுத்திக் கொள்ளவேண்டாம் என்று ஆறுதல் மொழிகூறி தன் கழுத்தில் அணிந்திருந்த பொற் சங்கிலியை கழற்றி கையில் பிடித்து வாலிபனை நோக்கி ஐயா இதோ இந்த சங்கிலியைப் பெற்றுக் கொள்ளுங்கள். இதை விற்று உங்கள் பசிப்பிணியை தணித்துக்கொண்டு நாளை மாலையில் இதோ அருகில் தோன்றும் பங்களாவிற்கு கட்டாயம் வாருங்கள். என் தந்தையிடம்கூறி தங்களுக்கு ஏதாவது வேலை கொடுக்கச் செய்கிறேன். இனி தாங்கள் வேலைவிஷயமாய் கவலைப்படவேண்டாம். இதை பெற்றுக்கொள்ளுங்கள் என்று சங்கிலியை அவனிடம் கொடுக்க அதை வாங்க வாலிபன் முதலில் மறுத்தானாயினும், அம்மங்கையின் வேண்டுகோளினாலும் தன் தாயின் பசிப்பிணியை தணிக்கவேண்டியதினாலும் ஒருவாறு சம்மதித்து அப்பொற் சங்கிலியை தன்னிரு கரங்களாலும் பெற்று கண்களில் ஒற்றிக்கொண்டான் வாலிபன். ஒன்றுக்கு மஞ்சவேண்டாம். நான் முன் சொல்லியது போல் நாளையிங்கு வாருங்கள் என் தந்தை யேதேனும் வழிசெய்வார். நேரமாய் விட்டபடியால் தாங்கள் சென்றுவாருங்கள். என அன்பு நிரம்பிய அமுதமொழியால் கூறினாள். உடனே அவ்வாலிபனும் வந்தனங்கூறி விடை பெற்றுக் கொண்டு தனது வீடுநோக்கி நடந்தான். அவன் மறையும்வரைப் பார்த்திருந்த அப்பாவை ஆ! கல்வியறிவும் கண்ணிய சிந்தையும் பொருந்திய இவ் வாலிபன் வறுமையால் வருந்தி வாடுவதைக் கண்டு யார்தான் மனஞ்சகிப்பார்? ஈவிரக்கம் பொறுமை பெருந்தன்மை மிகுந்தவர்களுக்கு ஏழ்மை நிலையும், பரோபகார சிந்தையின்றி பாதகத்தொழில் புரிகுபவர்களுக்கு எண்ணற்ற செல்வங்களையும் ஏருந்துமாராக அமைத்திருப்பது இறைவன் செயலன்றோ? என்னே விதியின் விந்தை நாம் எப்படியாவது அவருக்கு ஒரு வேலைகொடுக்கும்படி நமது பிதாவிடம் தெரிவிப்போம் என எண்ணியவாறு கலர்ச் சோலையை மறுபடியும் சுற்றிப்பார்த்து தனக்கு வேண்டிய புஷ்பங்களை பறித்துக் கொண்டிருக்கையில் அவளது தோழிகளில் சிலர் அங்குவந்து சேர்ந்தார்கள்.

"கனகம் அதோபார் அம்புசாக்ஷி பூபறித்துக் கொண்டிருக்கிறாள். அவள் தாயார் அம்புஜத்தை காணவில்லை தேடுகிறாளே! என் அம்புஜா இத்தனை நாழியாய் இங்கு என்னசெய்தாய்? பொழுது போனதுகூட உனக்கு தெரியவில்லையா என்ன?" என்றாள் தோழிகளி லொருத்தியாகிய செண்பகம் என்பவள்.

"கனகம் நமது அம்புஜாவிற்கு வசந்த காலத்தை பார்ப்பதென்றால் வெகு பிரியம் இயற்கை இன்பத்தை எப்பொழுதும் பருகிக்கொண்டிருப்பதில் அவளுக்கு ஒரு மகிழ்ச்சி ஏன் அம்புசா அப்படித்தானே?"

அம்புஜம்:—ஏண்டி என்னை பரிகாசம் செய்வதில் உங்களுக்கு இவ்வளவு ஆனந்தமா? வெகு அழகுதான் போங்கடி; எப்பவும் இதுவே தொழிலாய் விட்டது.

செண்பகம்:—நீ வந்து வெகுநேரமாய் விட்டதென்று உங்கம்மா தேடுகிறாள். எங்கள் மீது கோபித்துக் கொள்ளுகிறாயே?

மங்களம்:—ஆமாம் அவளுடைய மகிழ்ச்சியை நாம் கெடுத்துவிட்டோமென்று கோபமாய்த் தானிருக்கும்.

அம்புஜம்:—அடியே இனிமேல் இவ்விதம் பேசினால் தெரியுமா? உங்கள் தொல்லைதான் எப்பொழும் நான் இப்பொழுதுதானே வந்தேன்; அதற்குள் ஒவ்வொரு விதம் பேசுகிறீர்களே. உங்களுக்கு புத்தியிருக்கிறதா இல்லையா? சரிவந்து தொலையுங்கள் போகலாம்.

செண்பகம்:—அம்புஜா ஏதோ நாங்கள் விளையாட்டுக்காக கூறுகின்றோம் என்பதை அறியாமல் இதற்காக பிரமாதமாய் கோபித்துக் கொண்டிருக்கிறாய். இனிமேல் நாங்கள் எதற்காக உன்னிடம் விளையாடப் போகிறோம்.

கனகம்:—ஆமாம் அம்புஜாவிடம் பேசுவது ஜாக்கிரதையாய் பேசவேண்டும், இப்ப ரொம்ப கோபக்காரியாயிருக்கிறாள்.

அம்புஜம்:—சகிகாள் எனக்கு உங்கள் மீது என்னடி கோபம்? நானும் விளையாட்டாய்த்தான் கூறினேன். நீங்கள்தான் கோபித்துக்கொண்டிருக்கிறீர்கள். சரி அது போனால் போகட்டும் வாருங்கள் நாம் பங்களாவிற்கு செல்வோம்; நாழிகை யாகிவிட்டது. என்று கூறி எல்லோருமாய் பங்களாவிற்கு சென்றுவிட்டார்கள்.

* * *

ஐயோ பொழுது போய்விட்டதே என்னருமை குமாரன் இன்னும் வரவில்லையே. தினமும் இதற்குள் வந்துவிடுவானே? என்ன காரணமோ தெரியவில்லையே. ஒருவேளை வேலையின்று அதிகமாயிருக்குமோ ஐயோ என் செல்வ மைந்தன் இதுவரையிலும் பட்டினி கிடப்பானே. நான் உணவருந்தாமல் அவன் சாப்பிடமாட்டானே, பசி மயக்கத்தால் எங்கேனும் வழியில் களைத்து விழுந்துவிட்டானோ? அடஅப்பா என் கண்மணியே உனக்கின்று என்ன நேர்ந்ததோ அறியேனே? பாவி என் வயிற்றில் வந்து பிறந்து பாசில் நீ ஒரு சுகமும் காணவில்லையே. அன்புடன் உனை பெற்று வளர்த்து கல்வியறிவித்து நீ முன்னுக்கு வரவேண்டுமென்று இருந்த பொருள்களெல்லாம் விற்று உனை படிக்கவைத்தேன். அந்தோ எம்பெருமானுடைய ஈசனுக்கு கண்ணில்லையா? உயர்தர கல்வி பயின்ற எனது மைந்தன் அனுதினமும் மண் சுமந்து கூலிவேலை செய்து கஷ்டப்படுவதைப் பார்க்கவேண்டுமென்று பாவி நான் இன்னும் உலகில் உயிர் வைத்திருக்கின்றேன். மாட மாளிகை கூடகோபுரத்தில் மட்டற்ற பாக்கியத்துடன் மகிழ்ச்சியாய் வாழ்ந்து இப்பொழுது இந்த மண் குடிசையில் இருந்து மயங்கவேண்டுமென்று தலையிலெழுதியிருக்கையில் வருந்தினால் மாத்திரம் தரித்திரம் தீரப்போகின்றதா? என் செல்வமே உனது தந்தை உயிருடன் இருந்தால் நீ கூலிவேலை செய்வதை கண்ணால் கண்டு மனம் சகிப்பாரா? ஆ என் உள்ளம் துடிக்கிறதே ஐயோ மணியும் எட்டு ஆகிவிட்டதே. இனி நான் என்ன செய்வேன். அம்மா என்றவன் கூப்பிடும் ஒரு வார்த்தையே எனக்கு அமுதம் வார்த்தது போலிருக்குமே. இவ்விருளில் உன்னை எங்குவந்து தேடுவேன் என்று பிரலாபித்து தவித்து துடிதுடித்து கதறி கண்ணீர்விட்டு கலங்கி வருந்திக் கொண்டிருந்தாள் சுமார் முப்பத்தி எட்டு வயது மதிப்புள்ள ஒரு ஸ்திரீ. அவளிருக்கும் வீட்டில் ஒரு அகல் விளக்கு மங்கலாக எரிந்துக் கொண்டிருந்தது. அவ்வீடு சிறியதாயினும். மேற்புரம் ஓடுபோட்டிருந்ததுடன் நாற்புறமும் கல் சுவர்கள் கட்டப்பட்டிருந்தன. அச்சிறுவீடு பார்ப்பதற்கு மிக்க அழகாயும் அலங்காரமாயு மிருந்தது. அவ்வீட்டினுள்ளமேற்கூறியவாறு பிரலாபித்துக் கொண்டிருக்கும் ஸ்திரீயை நோக்குங்கால் தரித்திரமங்கு தலை

(அடுத்த பக்கம் பார்க்க)

## ஸ்ரீமதி அன்னுசண்டிக்கு முன்சீப் பதவி

திருவனந்தபுரம், நவ. 24—

திருவாங்கூர் ஹைக்கோர்ட்டில் அட்வகேட்டாக இருந்து வந்த ஸ்ரீ மதி அன்னுசண்டிக்கு, திருவாங்கூர் நீதி இலாகாவில் சீனியர் ஜில்லா முன்சீப் பதவி அளிக்கப்பட்டிருப்பதாகத் தெரிய வருகிறது. கோளத்தில் முதல் முதலாக அட்வகேட்டாக வந்தவர் ஸ்ரீமதிசண்டி தான். ஏழு வருஷங்களுக்கு முன்பு இவர் ஹைக்கோர்ட் வக்கிலானர். திருவாங்கூர் சட்டசபையில் கொஞ்சகாலம் அவர் ஒரு அங்கத்தினராகவும் இருந்தார். இவருக்கு வயது 32. இவர் இந்தப் பதவியேற்றுக்கொண்டால், திருவாங்கூரில் முதல் முதலாக நீதி இலாகாவில் பதவியேற்ற பெருமையும் இவரைச் சாரும்.

### கம்பெனிப் பதிவு காரியாலயம்

பினங்கிலுள்ள கம்பெனிப்பதிவு காரியாலயத்தை மூடிவிடுவதென்றும் கம்பெனிச் சட்டத்தின் கீழ் தஸ்தாவேஜுகளைத் தாக்கல் செய்வது பூராவும் சிங்கப்பூரில் செய்யப்பட வேண்டுமென்றும் சர்க்கார் தீர்மானித்திருப்பதை, பினங்கு வர்த்தக சங்கத்தின் சார்பாக ஆனரபிள் லெப்டினன்ட் கர்னல் ஜி. டி. ஏ. பிளெச்சர் நேற்றைய சட்டசபை கூட்டத்தில் பலமாக ஆக்ஷேபித்துப் பேசினர். பினங்கு பார் கமிட்டியும் இவ்வாக்ஷேபணையில் சேர்ந்து கொண்டது.





## அருமை நாதன்

(அல்லது)

## அதிசயபுரியின் அகோரக்கொலை

(முன் பக்கத் தொடர்ச்சி)

விரித்தாடுகிறதென்று தெள்ளென விளங்கும். வறுமையும், சிறுமையும் அவளடைந்தபோதிலும் அவள் தெய்வ பக்தியை கைவிடாது சிந்தையில் சதா கடவுளையே தியானம்செய்து வருவாள். இந்த ஸ்திரீ தான் மலர்ச்சோலையில் மயக்க முற்று ஒருவனிதாமணியால் தெளிவு பெற்று சிந்தை தேர்ந்த வாலிபனது தாய் என்பது நாம் கூறாமலே வாசகர்கள் அறிந்துகொண்டிப்பார்கள்.

நிற்க,

பொற்சங்கிலியைப்பெற்றுக்கொண்டு வழி நடந்த வாலிபன் நேராய் ஒரு லேவாதேவிக் கடைக்குச் சென்று அச் சங்கிலியை அடமானம் வைத்து சிறிது தொகையை வாங்கிக் கொண்டு பசியால் வாடும் தனது அன்னைக்கு பழ வகைகளும் மிட்டாய் தினுசுகளும் வீட்டுக்கு வேண்டிய சாமான்களும் வாங்கிக் கொண்டு தன் நிலைமையைக்கண்டு தனக்கிரங்கி யிவ்வித பேருதவி செய்து தன்னை காப்பாற்றிய காரிகையை தன் மனமார வாழ்த்திக்கொண்டே வீடு வந்து சேர்ந்து அன்பு நிறைந்த குரலில் அம்மா! என்றழைத்தவாறேஉள் நுழைந்தான்.

தன்மகனை கண்டவுடனே தாய் மட்டில்லா மகிழ்ச்சியடைந்து என் அப்பா இன்று இத்தனை நாழிகை. காரணமென்ன? உனக்கென்ன நேர்ந்தது? என்று கூறிக்கொண்டே தன் அருமை மகனின் மதிமுகத்தை உற்று நோக்கினாள்.

அம்மா வருத்தப்பட வேண்டாம். இதோ பழங்கள் வாங்கி வந்திருக்கிறேன். இதை முதலில் சாப்பிடுங்கள் பிறகு பேசிக்கொள்வோமென்று தான் வாங்கி வந்தவைகளை தன் தாயின் முன்பு வைத்துபசரித்தான்.

பழங்களையும் பலகாரங்களையும் பார்த்த தாய் பாவசமுற்று தன் குமாரனின் அன்பையும் தாய் பக்தியையும் கண்டு பெரிதும் வியந்தாள். பிறகு இருவருமாய் பழங்களை சாப்பிட்டு பசி தணிந்தனர். காலை முதல் பட்டினியாய்கிடந்த களைப்பால் வாலிபனது தாய்க்கு நித்திரை சூழ்ந்து கொள்ளவே மற்ற விபரங்களை காலையில் தன் மைந்தனிடம் கேட்டுக் கொள்ளலாமென நினைத்து பாயை விரித்து அதில் படுத்து தன்னை மறந்து நித்திரை போயினாள்.

மணியும் பத்து அடித்துவிட்டது. வாலிபனுக்கு தூக்கம் என்பது சிறிதும் பிடிக்கவில்லை. தன் படுக்கையில் படுத்தவாறே பலவிதம் நினைக்கலுற்றான்.

மலர்ச் சோலையில் மயக்கந் தீர்த்து ஆறுதலுரைத்து தானணிந்திருந்த பொற் சங்கிலியைத் தாராளமாய் கழற்றி தன் கையில் முழுமனதுடன் கொடுத்துதவிய மொய் குழலாளின் எழிலுருவமே அவனது கண்களுக்கு தோன்றித் தோன்றி மறைந்தது.

அந்தோ என்னே ஈசன் செயல்! நான் இன்று காலை முதல் தெருத் தெருவாய் அலைந்து திரிந்து ஏதேனுமொரு சொற்ப வேலையாவது கிடைக்காதாவென்று பிரம பிரயத்தனம் செய்து பார்த்தும் சோதனை போல எல்லாவிடங்களிலும் வேண்டாமென்று கூறி விட்டார்கள் ஏமாற்றமடைந்து முடிவில்ஏங்கிசோர்ந்துவழி நடக்கையில் அவ்விள மங்கையால் இன்று நம் ஆத்மா திருப்தியடைந்தது. இரண்டு உயிர்களை காப்பாற்றிய புண்ணியத்தை அந்த ஏந்திழையாள் இன்று ஏற்றுக்கொண்டாள். அந்தோ அம்மாதுசிரோன்மணிக்குஇச்சன்மத்தில் நான்என்னகைம்மாறுசெய்யப்போகிறேன். நாளைக்குவந்தால் தன் தந்தை மூலமாய் எப்படியும் வேலை கொடுப்பதாய் இயம்பியிருக்கிறாள்.

ஆனால் துரதிஷ்டசாலியாகிய என்னை அவ்வுத்தமியின் தந்தை கண்ணால் கண்டால் கூட என்னுடைய விதியானது அவரை வேலைகொடுக்கவொண்ணாமல் தடுக்கும். அத்தகைய பாவி நான் ஆ மாதர்க்கரசியே! மங்கையர் சிரோன் இனியே! நீ மனதிரங்கியிராவிட்டால் மன்று எங்கள் கதி என்னவாகுமென்பதை ஈசன்தானறிவார்! ஏழைக்கூலியாளனுகிய என் மீது இரக்கம் வைத்து மயக்கம் நீங்க தண்ணீர் தெளித்து பொன்போற் பிரகாசிக்குமுனது மெல்லிய கரத்தால் எனக்கு வீசி என் சோர்வைமாற்றி மனதை தேற்றி வறுமைக் கடலில் இருந்த எங்களை காப்பாற்றி வழி காட்டிய வஞ்சியே ஆ என்ன கருணை! என்ன பெருமை! கடவுளே உனது சிருஷ்டியில் இப்படிப்பட்ட அருள் குணமும் அளவிடா வனப்பும் அமைந்துள்ள மாதரை காண்பது மிகவும் அரிதே; மேன்மையானகுணத்தை படைத்த தாழ்மையானவர்களிடம் அன்பு காட்டும் அவ்வாரணங்கு நிமலனருளால் நீண்ட ஆயுளையும் நீங்கிடாப் புகழையும் பெற்று இந்நிலத்தில் வாழ வேண்டுமாய் பிரார்த்திக்கிறேன்.

என்று பல பல விதமாய் அப்பாவையரை புகழ்ந்து கொண்டேயிருந்தான்.

நித்திரா தேவியும் தனது முழுச் சக்தியுடன் வாலிபனை பிடித்துக் கொண்டாள்; வாலிபனே அவளுக்கு மருந்திடைக்க வகையறியாது நித்திரா தேவியிடம் வசப்பட்டு விட்டான்.

(தொடரும்)

**சொர்னவல்லி நாவல் விலை ரூ. 1-0-0.**



## விளம்பரம்.

புதுக்கோட்டை சமஸ்தானம் திருமயம் தாலூகா குழிபிரை வட்டம், குழிபிரையிலிருக்கும் தெ. மு. தெய்வருயன் செட்டியார் ஸம்சாரம் கண்ணம்மை ஆச்சி 1. மேற்படி தெய்வருயன் செட்டியார் மகன் இறந்துபோன முத்துப்பழனியப்ப செட்டியார் சம்சாரம் மீனாக்ஷி ஆச்சி 2. பேர்களும் சகலமான பேர்களுக்கும் தெரிவித்துக் கொள்ளுகிறதாவது:—

ராமனாதபுரம் ஜில்லா திருப்பத்தூர் தாலூகா கண்டவராயன்பட்டியிலிருக்கும் ந. பெரி. முத்தய்யா. செட்டியார் மகன் ராமசாமி செட்டியாரை எங்களில் 1. லெக்கத்தார் புருஷனும், 2. லெக்கத்தார் மாமனுமான மேற்படி தெய்வருயன் செட்டியாரவர்கள் இறந்துபோவதற்கு சிலநாள் முன் தனக்கு ஸ்வீகாரம் செய்துகொள்ளும் எண்ணத்துடன் எங்கள் வீட்டில் கூட்டிவந்து அபிமானித்திருந்ததில் அவர் எண்ணப்படி மேற்படியாரை ஸ்வீகாரம்செய்துகொள்ளாமலேயே இறந்துபோய்விட்டார்.

அப்படியிருக்க மேற்படி ராமசாமி செட்டியார் பெங்கள் குடும்ப ஸ்வீகார புத்திரனென்று சொல்லிக் கொண்டும் மனு முதலியன செய்து கொண்டும் வருவதாகத் தெரிந்து அந்த ராமசாமி செட்டியாரை கூட்டி வந்து பிரட்டாய் ஸ்வீகார புத்திரனைச் சொல்லிக்கொள்வது சரியல்ல வென்று எச்சரித்து இறந்து போன தெ. மு. தெய்வருயன் செட்டியார் அபிமானித்ததற்காக தயாவிஷயமாய் ரூ. 5650—0—0 மேற்படி ராமசாமி செட்டியாருக்கு நாங்கள் கொடுத்து மேற்படி ராமசாமி செட்டியாரிடம் விடுதலைப்பத்திரம் எழுதி வாங்கி ரிஜிஸ்ட்டராகி இருக்கிறது.

ஆகலால் மேற்படி ராமசாமி செட்டியாருக்கு எந்தக்காலத்திலும் இந்தக் குடும்பத்தில் எவ்வித பாத்தியமுமிருக்ககாக இல்லை என்றும் அவர் இந்தக் குடும்பத்துக்கு கடன் முதலியவை வாங்கவேண்டிய பொருப்பும் அவசியமும் இல்லை என்றும் அவர் பொய்யாக எங்கள் தெ மு. விலாசத்திற்கு கடன் முதலானவை வாங்கி இருந்தாலும் பராதீனங்கள் செய்திருந்தாலும் இனிமேல் மேற்படி விலாசத்துக்கு கடன் முதலியன வாங்கினும் அவைகள் அவர் சொந்த ஹோதாவைப் பொருத்ததேயல்லாமல் எங்கள் குடும்ப ஸ்த்தாவர சங்கம முதலிய எவ்வித சொத்துக்களையும் கட்டுப்படுத்தா தென்றும் இந்த விளம்பர மூலம் எச்சரிக்கை செய்கிறோம்.

கண்ணம்மை ஆச்சி.
மீனுச்சி ஆச்சி.





## தேசீயக் கொடியா? கட்சிக் கொடியா?

நீலகிரி ஜில்லா போர்ட்டில் தேசீயக் கொடியை ஏற்றிவைக்கும் விஷயமாக வந்த தீர்மானத்தை யொட்டி, இக் கொடி தேசீயக்கொடியா அல்லது காங்கிரஸ் கட்சிக் கொடியா என்பதைப் பற்றி சர்க்கார் அபிப்பிராயத்தைக்கேட்பதென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறது.

### பெங்களூர்

பெங்களூர், நவ 23—

மைசூர் சமஸ்தானத்தின் பல பாகங்களில்மின்சாரவசதி கைத்தொழில் அபிவிருத்தியாகி வருவதால், மின்சார உற்பத்தி செய்வதற்கு, சிவசமுத்திரத்திலிருந்து 20 மைல் தூரத்தில் ஷிம்சாநதி நீர்வீழ்ச்சி யிடத்தில் புதிதாக பவர் அவுஸ் முதலியன கட்டுவதற்கு ஐம்பத்திரண்டு லட்ச ரூபாய் திட்டம், மகாராஜா அவர்களின் அங்கீகாரம் பெற்றிருக்கிறது. இவ்வேலைப்பாடுகள் ஆரம்ப விழா மகாராஜாவினல் டிசம்பர் மத்தியில் நடைபெறும்.

### கதருக்கு ஒரிசா உதவி

கட்டாக் நவ. 24—

ஒரிஸா கவர்ன்மெண்டார் அகில இந்திய நூல் நூற்போர் சங்கத்திற்கு இவ்வருஷம் பருத்தி சாகுபடி செய்வதற்கும் கதர் உற்பத்தி யாக 2500 மானியமளித்திருக்கிறார்கள். இதல்லாமல் ஒரிஸா எங்கும் கதர் உற்பத்தி செய்ய ஏற்பாடு செய்வதற்காக நூல் நூற்போர் சங்கத்திற்கு வட்டியில்லாமல் 25000 ரூபாய் கடன் கொடுத்திருப்பதாகத் தெரிகிறது.

### பர்மா அரிசி உற்பத்தி

ரங்கூன்

சென்ற வருஷத்தை விட இவ் வருஷம் 33400 ஏக்கர்களில் அதிகப்படியாக நெல் சாகுபடி செய்யப்பட்டிருக்கிறது. மேல் பர்மாவில் மட்டும் 10800 ஏக்கரில் அதிகமாக நெல்உற்பத்தி செய்யப்பட்டிருக்கிறது. பலர் கிலே திருப்திகரமாக இருக்கிறது. திருப்திகரமான மகசூல் கிடைக்கும் போலிருக்கிறது.

### அரசியல் கைதிகள்

கல்கத்தா நவம்பர் 29.

1100 பந்தோபஸ்துக் கைதிகளை விடுவிக்கும் வேலை ஒருவாரமாக நடைபெற்று வருகிறது. தினம் 100 பேர் வரை விடுவிக்கப்படுகின்றனர். அந்தமானில் பாக்கியிருக்கும் 200 கைதிகளையும் திருப்பியழைக்கும் வேலை ஜனவரி மாத முடிவுக்குள் பூர்த்தியாகி விடுமென்று தெரிகிறது. இவர்களைத்தவிர கைத்தொழில் முகாம்களில் 160 கைதிகளிருக்கின்றனர். அவர்கள் வேலை முடிந்ததும் அவர்களும் விடுவிக்கப்படுவார்கள்.

### குடித்தனக்காரன் வீட்டில் மந்திரி

கான்பூர், நவ. 24—

கிராம வாசிகளுக்காக காங்கிரஸ் மந்திரிசபை இருக்கிறது என்பது நேற்று தெளிவாகியது. மத்ய மாகாண ஸ்தலஸ்தாபன மந்திரி கனம் ஸ்ரீமதி விஜயலக்ஷிமி பண்டிட் டோராபூருக்குப் போகும் மார்க்கத்தில் கல்வாபுர கிராமத்தில் தங்கி, ஸ்ரீராம் என்ற குடியானவனின் மண் வீட்டிற்குள் போய் அவனது ரொட்டியை பகிர்ந்து புசித்தார்.

### ஜேர்மனியில் ரப்பர்வரி உயர்வு

பெர்லின், நவ. 27—

டிசம்பர் 1உ யிலிருந்து 2 அந்தர் ரப்பருக்கு இப்பொழுது வசூலிக்கப்படும் 125 மார்க் வரி, 160 மார்க்காக உயர்த்தப்படும். ஜெர்மன் செயற்கை ரப்பர் தொழிலுக்குப் பண உதவி அளிப்பதற்காக மே 13உ இந்த விதி விதிக்கப்பட்டது.

## வெண்திரைச் செய்திகள்

## மீண்டும் சுப்பய்யாபாகவதர்!

## தெனலிராமன் வருகிறார்!

### தமிழ் படங்களில் ஹாஸ்யம்

இந்தியர்களில்—முக்கியமாய்த் தென்னிந்தியர்கள்—எதையும் நூதனமாய்ச் செய்ய ஆசைப்படுவதில்லை, ஆங்கிலத்தில் செய்திப் படங்கள், உலகாதிசயப் படங்கள், மிக்கி மௌஸ் (Mickey mouse) போன்ற சித்திரப் பேசும் படங்கள் ஆகியவைகளை சுமார் 2500 அடி நீளத்தில் எடுத்து வெளியிடுவதை நம்மவர் பார்த்தும், கைகொட்டிச் சிரித்தும் ஆனந்தமடைகிறார்கள். தமிழில் இது போன்ற வேடிக்கைப் படங்களை ஏன் தயாரிக்கக் கூடாது?

இம்மாதிரி சிறு வேடிக்கைப் படங்களைத் தயாரிப்பதில் நீங்கள் (பட முதலாளிகள்) அடியிற்கண்ட முக்கியமான விஷயங்களை நன்கு கவனிக்கவேண்டும்.

வண்ணான் வண்ணாத்திகளுக்கும், மச்சான் மச்சினிகளுக்கும் படத்தில் எந்த விதத்திலும் இடந்தரலாகாது. இந்த ஹாஸ்யச் சுவை ஒவ்வொரு படத்திலும் நிரம்பித் ததும்பி வழிந்தி ஓடிவிட்டபடியால், இவர்களுக்குக் "கடைசி வந்தனம்" செலுத்திவிடலாம்.

மொக்கையான ஆள், தொந்தி தொப்பை உடையவர்கள் பேருக்கு ஆக்ட் செய்கிறேனென்றாலும், ஸ்டுடியோப் பக்கமே அவர்களை வரவிடலாகாது. தப்பித்தவறி எங்கேயாவது அவர்களது பிரம்மாண்டமான சொரூபம் படத்தில் விழுந்தால், வந்துவிடும் மோசம்! தொந்தி தொப்பை நடிகர்களைப் பார்த்துச் சிரித்து நம்முடைய தமிழ் பட ரஸிகர்களின் வயிறெல்லாம் புண்ணாகிவிட்டது. போதும் போதும், பெரிய தொந்தியும், குட்டைக் கழுத்தும், மொட்டைத் தலையும்!

கீழ்த்தர ஹாஸ்யங்களை அறவே ஒழிக்க வேண்டும். பெண்மணிகளும் பார்த்து ரசிக்கும் தன்மையில் அவ்வளவு மேலான முறையில் படப்போக்கும், கலை அமைப்பும் பொருந்தல் வேண்டும். நமது தமிழ் நூல்களில் ஆராய்ந்து அலசியெடுத்த சிறு சிறு கதைகளை வேடிக்கைப் படங்களாகப் பிடிக்கலாம். இவ்விதப் படங்களுக்குப் பாட்டுக்களே தேவையில்லை.

எனவே நம் பட முதலாளிகள் பாலிய விவாகம், வரதக்ஷிணையின் கொடுமை, குடியின் கேடு, காமலீலையின் கொடூரம். கள்ள புருடனின் அவமானம் முதலிய சமூக சீர்திருத்தமான கொள்கைகளைக் கொண்ட சிறு வேடிக்கைப் படங்களைப் பிடிக்கலாம். ஒவ்வொரு தமிழ்பட முதலாளியும் இதைப் பற்றி அவசியம் ஆலோசிக்க வேண்டும்.

—கே. எஸ். ஸ்ரீநிவாஸ், மதுரை.

### இந்தியாவின் முதல் வர்ணப்படம்

இந்தியாவில் தயாரிக்கப்பட்டுள்ள முதல் கலர் படம் கிஸான் கன்யாவாகும். இதைத் தயாரித்தவர்கள் இம்பீரியல் பிலிம் கம்பெனியார். இவர்கள்தான் இந்தியாவின் முதல் பேசும் படத்தை எடுத்தவர்கள். இந்தக் கலர் படத்தில் பத்மாதேவி என்ற வங்காளி நடிகை பிரதம பாகத்தில் நடிக்கிறார். கதை ஒரு குடியானவனின் புதல்வியைப் பற்றியது. இக்கம்பெனியார் "ஸினி கலர் ப்ரோஸஸ்" என்ற வர்ணப் படப் பிடிப்பு முறையைக் கையாளும் பிரத்தியேக உரிமையைப் பெற்றிருக்கின்றனர். இரண்டு லக்ஷ ரூபாய் செலவில் இவர்கள் வர்ணப் படம் பிடிப்பதற்குத் தேவையான ஒரு ரசாயன சாலையையும் புதிதாகக்ச கட்டியிருக்கின்றனர்.

### சுப்பய்யா பாகவதர் மீண்டும் தோன்றுகிறார்

நாடகமேடையில் புகழ்பெற்ற ஸ்ரீ எஸ். வி. சுப்பய்யா பாகவதர் மீண்டும் திரையில் தோன்றப் போவதாகவும், இவர் நடிக்கப் போகும் படம் வள்ளி பரிணயம் என்றும் வதந்தி உலவுகிறது. ஸ்ரீ பாகவதர் முதன் முதலாக சுபத்ரா பரிணயம் தமிழ் படத்தில் தோன்றி இவரும், படமும் படுதோல்வியுற்றதை நேயர்கள் மறந்திருக்கவே முடியாது. இந்தப் படத்தில் ஸ்ரீ பாகவதர் முதல் காட்சியிலேயே தோன்றி "ஸ்ரீரகுவர சுகுணலயா" என்ற கீர்த்தனத்தை ஸ்வர வரிசைகளுடன் பாடுவதோடு, முன்பு "வண்ணான் வந்தானே" மெட்டில் பாடியது போல இப்பொழுது இந்தப் படத்தில் "ட்ரியோ" மெட்டில் பாட வேண்டுமென்று மஹா ஜனங்கள் எதிர் பார்ப்பதாகத் தெரிகிறது.

### துர்க்காபாய்க்குப் பரிசு

புனவைச் சேர்ந்த கிரான் என்ற சினிமா வாரப் பத்திரிகை 'சிறந்த நடிகை போட்டி' ஒன்றை நடத்தியது. இப்போட்டியில் துர்க்காபாய் கோட்டேக்கு அதிக ஓட்டுகள் கிடைத்ததால் அவருக்கு தங்க மெடல் ஒன்று பரிசளிக்கப்பட்டது. 42 நடிகைகளுக்கு மொத்தம் 1,417 ஓட்டுகள் போடப்பட்டன. இதில் கோட்டேயுக்கு 331 ஓட்டுகளும் உமா சஷிக்கு 216 ஓட்டுகளும், தேவிகாராணிக்கு 123 ஓட்டுகளும் கிடைத்தன.

### துகாராம் - கி - ஜே!

இப்பொழுது பிரபாத் துக்காராம் பம்பாயில 50-வது வாரமாகக் காண்பிக்கப்பட்டு வருகிறது! இன்னும் 2 வாரங்கள் ஓடினல் சரியாக ஒரு வருஷக் கணக்குப் பூர்த்தியாகிவிடும்.

ஜுபிடர் பிக்சர்ஸ்— இவர்களுடைய அனாதைப் பெண் தமிழ்ப்படத்தின் ஷூட்டிங் எம். பி. வி. ஸ்டுடியோவில் ஸ்ரீ. ஆர். பிரகாஷின் டைரெக்ஷனில் ஆரம்பமாகியிருக்கிறது.

நேஷனல் மூவிடோன்:—இவர்கள் மதுரை ஒரிஜினல் பாய்ஸ் கம்பெனியாரின் பிரபல நாடகமான பஞ்சாப் கேஸரியைத் தமிழ்ப்படமாக எடுக்க ஏற்பாடாகி வருகிறது. இப்படத்தில் ராஜ மோஹனில் நடித்த கே. பி. கேசவன் முதலியவர்களே நடிப்பார்களாம். இப்படத்தில் பிரதம ஸ்த்ரீ பாகங்களில் நடிக்க புதிய நடிகைகள் தேர்ந்தெடுக்கப்பட்டு வருகின்றனராம்.

ஸெண்ட்ரல்ஸ்டுடியோஸ், கோவை:— இவர்களுடைய தெலுங்கு துக்காராம் அநேகமாகக் காட்சிக்குத் தயாராகிவிட்டது. தமிழ் துக்காராம் இன்னும் தயாராகிக் கொண்டிருக்கிறது. இந்தப்படத்தை முடிப்பதற்கு முன்னரே ஸ்ரீ. எம். எல். டாண்டன் இந்த ஸ்டுடியோவினின்றும் விலகிக் கொண்டதால் பாக்கிப் பாகத்தை டைரெக்டர் ப்ரேம் சேத்னு எடுத்து வருகிறார்.

ராஜகோபால் டாக்கீஸ் காரைக்குடி:— புதிதாக ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் இக்கம்பெனியார் கிருஷ்ணன் தூது தமிழ் பேசும் படத்தை எடுப்பார்கள். இத்துடன் திருக்கோகர்ணம் ஸ்ரீமதி டி. என். மாணிக்கத்தின் சங்கீதக் கச்சேரியையும், தெனலிராமன் என்ற ஹாஸ்யப் படத்தையும் எடுப்பார்கள்.

மெஜஸ்டிக் பிக்சர்ஸ், சென்னை:—இத் தப் புதுக் கம்பெனியாரும் தெனலிராமன் என்ற ஹாஸ்யத் தமிழ் படத்தை 6 ரீல்களில், கல்கத்தா ராதா பிலிம் கம்பெனியாருடன் சேர்ந்து தயாரிப்பார்கள் எனத் தெரிகிறது.

சிந்தாமணி பிக்சர்ஸ்:—டைக்டர் ஓய். வி. ராவ் இவர்களுடைய பக்த மீராவின் ஒத்திகைகளை நடத்திவருகிறார். அடுத்த வாரத்தில் வெளிப்புறக்காட்சிகளை எடுப்பார். ஹரிகேசவ நல்லூர் சகோதரர்கள் இப்படத்தின் சங்கீத டைரெக்டர்களாக இருக்கின்றனராம்.

ஸேலம் ஸிடி:—இங்கு ராமாநுஜர் படத்தின் ஷூட்டிங் ஆரம்பமாகி விட்டது. இதில் பல சிறைசென்ற தேசபக்தர்களும், பத்திரிகையில் ஈடுபட்டவர்களும் நடிக்கின்றனர் என்பதை நேயர்கள் முன்பே அறிவார்கள்.

ஸுபர் ஸினி லேபரட்டரி:—இதுவரையில் பிலிம்லெபரட்டரியாக இருந்த இதை ஒரு ஸ்டுடியோவாக மாற்றத் தீவிர முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. கெமிரா, ரிக்கார்டிங் மெஷின் ஆகியவைகளுக்கெல்லாம் ஆர்டர் கொடுத்திருக்கின்றனர். மிக அநுபவமுள்ள கெமிராமென் ஜிதன் பானர்ஜியும், ரிக்கார்டிஸ்ட் டிஷ்ஷாவும் சேர்ந்து இந்த லெபரட்டரியை ஆரம்பித்திருக்கும் விஷயம் நேயர்களறிவர். கூடிய சீக்கிரத்தில் இவர்கள் ஒரு படத்தையும் எடுப்பார்கள் என்று தெரிகிறது

## ரயில் வண்டிப் போக்கு வரவு

### காரைக்குடியிலிருந்து திருச்சிக்கு

| வண்டிகள் விபரம். | வரும் நேரம் | புறப்படும் நேரம் |
|---|---|---|
| நிர். 32. பாசஞ்சர். | .... | 7– 0 |
| நிர். 68. „ | 10–10 | 10–20 |
| நிர். 30. „ | 13–57 | 14– 7 |
| இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் | 16–15 | 16–25 |
| நிர். 26. பாசஞ்சர் | 20– 3 | 20–13 |
| நிர். 8. தனுஷ்கோடி பாண்ட் பாசஞ்சர் | 1–21 | 1–31 |

### காரைக்குடியிலிருந்து மானமதுரைக்கு

| வண்டிகளின்விபரம். | வரும் நேரம் | புறப்படும் நேரம் |
|---|---|---|
| நிர். 25. பாசஞ்சர் | 6–35 | 6–41 |
| இண்டோ-சிலோன் எக்ஸ்பிரஸ் | 10– 5 | 10–13 |
| நிர். 67. பாசஞ்சர் | 12–55 | .... |
| நிர். 33. „ | .... | 14–25 |
| நிர். 29. „ | 15–51 | 16–17 |
| நிர். 31. பாசஞ்சர் | 19–58 | 20–12 |
| நிர். 7. தனுஷ்கோடி பாண்ட் பாசஞ்சர் | 0–13 | 0–19 |

33 நிர் பாசஞ்சரும், 29 நிர் பாசஞ்சரும் நேராக மதுரை ஜங்ஷனுக்குப் போகின்றன.

"தேவகோட்டை ரோடு"

காரைக்குடிக்கடுத்த தேவகோட்டை ரோட்டிலுள்ள ஷ்டேஷனில் இருந்து.

### மானமதுரைக்கு

| வண்டிகள் விபரம். | புறப்படும் நேரம். |
|---|---|
| நிர். 25 பாசஞ்சர் | 6– 5 |
| இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் | 10–22 |
| நிர். 67 பாசஞ்சர் | .... |
| நிர். 33 „ | 14–33 |
| நிர். 29 „ | 16–26 |
| நிர். 31 „ | 20–20 |
| நிர். 7 தனுஷ்கோடி பாசஞ்சர் | |

### திருச்சிக்கு

| வண்டிகள் விபரம். | புறப்படும் நேரம். |
|---|---|
| நிர். 68 பாசஞ்சர் | 10– 3 |
| நிர். 30 „ | 13–50 |
| நிர். 2 „ | 16—7 |
| நிர். 34 „ | 18–19 |
| நிர். 26 „ | 19–56 |
| நிர். 8 „ | .... |

### சினிமாக்கலைக்கு சர்வகலாசாலைப் பட்டங்கள்

மற்ற கலைகளுக்குப் பட்டமளிப்பது போல சினிமாப்படக் கலைக்கும் பட்டங்கள் வழங்க அமெரிக்காவில் பல சர்வகலாசாலைகள் முன் வந்துள்ளன.

கொலம்பியா சர்வகலாசாலையில் அசையும் படங்களின் சரித்திரமும் அதன் நுட்பங்களும் ஒரு பாடப்பிரிவாக அமைக்கப் பெற்று வேலை அதி தீவிரமாக நடந்து வருகின்றது.

நியூயார்க் சர்வகலாசாலையில் பிலிம்களை நுட்பமாகப் படிக்க ஒரு வகுப்பு நடைபெறுகிறது. இம் முறையில் அமெரிக்கா எல்லா தேசங்களுக்கும் முன்னணியில் நிற்கிறது.

## ஹிந்தி பரீக்ஷை

### தமிழ் நாட்டில் சிறப்பாக தேறியவர்கள்

சென்னை, நவ. 26—

தக்ஷிண பாரத ஹிந்தி பிரசாரசபை காரியதரிசி ஒரு அறிக்கை விடுத்துள்ளார். அதில் தென்னிந்தியாவிலுள்ள மாணவர்கள், இதைத் தவிர பம்பாய், ஹைதராபாத், பர்மா முதலிய இடங்களிலிருந்தும், செப்டம்பர் 11, 12ம் தேதிகளில் நடந்த ஹிந்தி பரீக்ஷைக்கு ஆஜரான விவரம் தெரிவித்திருக்கிறார்.

மொத்தம் வந்த மனுக்கள் 4,4.8. இதில் பரீக்ஷைக்கு ஆஜரானவர்கள் 4,075. தேறியவர்கள் 3,105.

மத்யமா, பிரதமிக், ராஷ்டிரபாஷா முதலிய பரீக்ஷைகளில் முதன்மையாக தேறியவர்களுக்கு பரிசுகள் அளிக்கப்பட்டிருக்கின்றன. இதில் தமிழ் நாட்டில் பிரதமிக் பரீக்ஷையில் போடிநாயக்கனூர் ஸ்ரீ எஸ். மகாலிங்கம் அய்யருக்கு இரண்டாவது பரிசு கிடைத்திருக்கிறது. மத்யமா பரீக்ஷையில் விருதுநகர் ஸ்ரீ பி. அருணாசலத்திற்கு மூன்றாவது பரிசு கிடைத்திருக்கிறது.

இந்த ஹிந்தி பரீக்ஷையில் அந்தந்த மாகாண வாரியாக யார் யார் முதலாவதாக இரண்டாவதாக தேறியிருக்கிறார்கள் என்ற (தமிழ் நாடு) விவரம் வருமாறு:—

பிரதமிக்

(1) எஸ். மகாலிங்க அய்யர், போடிநாயக்கனூர் (2) ஸ்ரீ. ஜி. சுப்ரமண்ய சர்மா, சாத்தூர்.

மத்யமா

முதலாவது: ஸ்ரீ பி. அருணாசலம், விருதுநகர்; இரண்டாவது ஸ்ரீ என். சுப்ரமண்ய அய்யர் தஞ்சாவூர்.

ராஷ்டிரபாஷா

முதலாவது. ஸ்ரீ. எஸ். கிருஷ்ணன், கும்பகோணம் இரண்டாவது ஸ்ரீ கே. ஆர். சுந்திரம் கன்னியூர்.

இவ்வருஷம் ஸ்ரீ வாஜ்பாயி பரிசு ஸ்ரீ பி. அருணாசலத்திற்கு கொடுக்கப்பட்டது.

வர வர ஹிந்தி பரீக்ஷை அபிவிருத்தியடையும் புள்ளி விவரமும் அறிக்கையில் கூறப்பட்டிருக்கிறது. 1922-ம் வருஷ முதல் 1930-ம் வருஷம் வரை 73 இடங்களில் நடந்த பரீக்ஷைகளில் மொத்தம் 9,116 மாணவர்கள் தேறினர். 1937-ம் வருஷத்தில் 333 இடங்களில் பரீட்சை நடந்தது. 8,236 மாணவர்கள் தேறினர். 1922-ம் வருடம் முதல் இன்றுவரை 61310 மாணவர்கள் தேறியிருக்கின்றனர்.

1938-ம் வருஷத்தில் பிப்ரவரி 12உ முதல் 13உ ஹிந்தி பரீக்ஷைகள் நடக்கும். மனுக்கள் ஜனவரி 15-ம் தேதிக்குள் சபைக்கு கிடைக்கவேண்டும்.

## முதலாவது விஷப்புகைத்தடை பள்ளிக்கூடம்

### சிங்கப்பூரில் ஆரம்பம்

சிங்கப்பூர், நவ 16—

சிங்கப்பூரில் முதலாவது விஷப்புகைத் தடை போதகர்கள் பயிற்சி சேற்று ஆரம்பித்தது. வைத்தியக் கல்லூரியில் ஸெயின்ட் ஜான் அம்புலன்ஸ் அஸோஸியேஷனின் ஆதரவில் நடந்த இப்பள்ளிக்கூடத்திற்கு சுமார் 50 ஸ்திரீ புருஷர்கள் வந்திருந்தனர். அவர்களில் ஒரு நெருப்பிலாகா சூப்பரின்டெண்டு முதல், டாக்டர்கள், சானிடரி இன்ஸ்பெக்டர்கள் வரை பல வேலைக்காரர்களிருக்கின்றனர்.

இவ்வகுப்பு 7 வாரங்கள் வரை நடைபெறும். கடைசி வாரத்தில் ஒரு பரீக்ஷை வைக்கப்பட்டு, தேர்ச்சி பெற்ற போதகர்களென்றோ அல்லது வெறும் பயிற்சி பெற்றவர்களென்றோ சர்ட்டிபிகேட்டுகள் கொடுக்கப்படும்.

இதில் பயிற்சி பெற்றவர்கள் மற்றவர்களுக்கும் விஷப்புகைத் தடைமுறையைச் சொல்லித்தரலாமென்பதே இதன் நோக்கம்

தற்போது 4 போதகர்கள் மட்டுமே இருக்கின்றனர். ஆனால் கூடிய சீக்கிரம் 500 தேர்ச்சி பெற்ற போதகர்கள் உண்டாக்கப்படுவார்களென எதிர்பார்க்கப்படுகிறது.











## ஹரிஜனங்களுக்கு நில ஆர்ஜிதம்

நவ, 24—

சென்னை சர்க்காரின் அபிவிருத்தி இலாகா கீழ்கண்ட உத்தரவை பிறப்பித்திருக்கிறது:— சர்க்கார் உத்தரவுப்படி புஞ்சை நிலத்திற்கு ஒரு ஏகராவுக்கு அதிக பக்ஷம் 150 ரூபாய்க்கும் நஞ்சைக்கு ஏக்ராவுக்கு 350 ரூபாய்க்கும் உட்பட்டு ஹரிஜனங்களின் நிலம், வீட்டு மனைகளுக்காகவும் பாதிச் செலவை சர்க்கார் ஏற்றுக் கொள்வார்கள். பாக்கித் தொகையில், ஆர்ஜிதத்திற்கு முந்தி 50 % ஐ மனுதார் கட்டவேண்டும், மீதியுள்ள 50 % ஐ ஓரளவுக்குட்பட்டு 10 வருஷத்திற்கு மேற் போகாமல் மூலதனத்தையும், வட்டியையும் சேர்த்து வருஷத்தவணைகளில் கட்டவேண்டும், என்று மேற்படி உத்திரவில் கூறப்பட்டிருக்கிறது. இவ்விஷயத்தை சர்க்கார் புனராலோசனை செய்தார்கள், ஹரிஜனங்களுக்கு மேற்கொண்டு சலுகை காட்ட உத்தேசித்து சர்க்காரால் அளிக்கப்படும் 50% கிராண்டு முறை குறித்த எல்லைக்குட்பட்டு நீடிக்கப்படு மென்றும், ஆனால் பாக்கித் தொகை சம்பந்தமாக 50%க்குப் பதிலாக ஆர்ஜிதத்திற்கு முன் மனுதார் 25% ஐயே கட்ட வேணுமென்றும், மீதித் தொகையை 10 வருஷத்திற்கு மேற்படாமல் மூலதனத்தையும், வட்டியையும் சேர்த்து வருஷத்தவணைகளில் கட்ட வேண்டுமென்றும், இப்பொழுது சர்க்கார் உத்தரவிடுகிறார்கள்.

## பினங்கில் இந்தியா ஏஜெண்டு

### செட்டியார் சங்கத்தில் உபசாரம்

ஐப்பசி மாதம் 28-ந் தேதி மாலை 6 மணிக்கு இந்திய ஏஜெண்ட் ஸ்ரீ சி. எஸ், வெங்கிடாச்சார் ஐ. சி. எஸ். அவர்கள் பினங்கு நாட்டுக்கோட்டை செட்டியார்கள் வர்த்தக சங்கத்திற்கு விஜயம் செய்தார்கள்.

அன்னவர்களை சங்கக் காரியதரிசி திரு. க. வீ. அழ. மு. சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் வரவேற்றுப் பின்வரும் [illegible] வழங்கினார்கள்.

"இந்திய ஏஜென்சி ஸ்தாபனம் மலேயாவில் 1925-ம் வருடம் தோன்றி சுமார் 13 வருடங்களாகின்றன. இதனிடையில் நான்கு இந்திய ஏஜெண்டுகளான ராவ் சாகிப் அருளானந்தம் பிள்ளை, ராவ்சாகிப் சுப்பையா நாயுடு, ராவ்சாகிப் குன் உன்னி ராமன் நாயர், ராவ்சாகிப் முகுந்தன் முதலியோர் வந்து திரும்பியுள்ளனர். மாஜி இந்திய ஏஜெண்டுகள் எல்லாரும் மாகாண சர்க்கார் உத்தியோகத்தைச் சேர்ந்தவர்களானாலும் அவர்கள் இம் மலேயாவாழ் இந்தியர்களுக்குச் செய்த நன்மையும், தொண்டும் மறக்கப் பாலதன்று. இந்தியர்கள் உள்ள பல அயல் நாடுகளில் ஐ. சி. எஸ். வர்த்தகத்தைச் சார்ந்தவர்களே. இந்திய ஏஜெண்டாக அனுப்பப் பெற்றுவர இவண் வாராதது பெருத்த குறையாகவிருந்து திரு. வெங்கிடாச்சார் அவர்கள் அவதாரத்தால் ஒருவாறு நீங்கியது. இந்தியாவில் சுமார் 14 வருட காலம் உத்தியோகத்திலிருந்து பழுத்த அனுபவம் பெற்றவர்கள். எனவே இம்மலேயாவாழ் இந்தியர்களுடைய அந்தஸ்தை உயர்த்துவதற்கும் இந்திய—மலேயா வியாபாரத்தை அபிவிருத்தி செய்வதற்கும்; ஹிந்து விவாக சட்டத்தை நிறைவேற்றி வைத்து நலன் காணுவதற்கும் இந்திய தொழிலாளியிடமுள்ள கொடிய பழக்கமான மதுவை ஒழித்து நல்ல ஸ்திதிக்கு கொண்டு வருவதற்கும் உழைப்பார்களென நம்புகிறேன்."

பிறகு வந்திருந்தோர் அனைவருக்கும் சிற்றுண்டி வழங்கப்பட்ட பின் திரு. நா. கு குப்பான் செட்டியாரவர்கள் விருந்தினரைப் பாராட்டி இந்திய மக்களுக்கு ஏஜெண்டவர்கள் முக்கியமாகச் செய்ய வேண்டிய சிலவற்றைப் பற்றி அழகாகவும் சுருக்கமாகவும் பேசினார்கள். கரகோஷத்தினிடையே திரு. வெங்கிடாச்சார் எழுந்து தனக்கு வர்த்தக சங்கத்தார் அளித்த வரவேற்புக்கு நன்றி செலுத்துவதாகவும்; ஒற்றுமையே உலகைக் காக்கும் எனும் பழமொழிப்படி மலேயாவாழ் இந்தியர்களுக்கு தன்னாலியன்ற உதவி செய்வதாகவும் எல்லா இந்தியர்களும் ஐக்கியத்தோடும், கட்டுப்பாட்டோடும், ஊக்கத்தோடும் உழைக்கும்படி கேட்டுக் கொண்டார்.

பிறகு சங்கக் காரியதரிசியவர்களால் விருந்தினருக்கும், வந்திருந்தோருக்கும் வந்தனம் கூறப்பெற்று கூட்டம் இனிது முடிவெய்தியது.

## கார்ப்பரேஷன் மெம்பர்கள் மீது 'சர்சார்ஜ்'

### 12 பேர்களுக்கு உத்தரவு

சென்னை, நவ. 25—

1934-ம் வருஷத்தில் சென்னை கார்ப்பரேஷன் ஒர்க்ஸ், நிதி, நிரந்தரக் கமிட்டிகளில் மெம்பர்களாயிருந்த 12 பேர்கள் மீது, ஸ்தல ஸ்தாபன கணக்கு பரிசோதனை இன்ஸ்பெக்டர், ரூ. 491-2.5க்கு ஒரு 'சர்சார்ஜ்' சர்டிபிகேட் பிறப்பித்திருக்கிறார். இன்ஸ்பெக்டரின் உத்தரவு பின்வருமாறு;—

1935-36ம் வருஷத்திற்கு எலக்டிரிக் பல்புகள் சப்ளை செய்வதற்கு 1934 ஆகஸ்ட் மாதத்தில் டெண்டர்கள் அழைக்கப்பட்டன.

இந்தியன் ஸ்டோர்ஸ் இலாக்கா மூலம் தங்களிடம் சாமான் வாங்கினால், கார்ப்பரேஷனுக்கு மலிவான விலையில் சாமான்கள் கிடைக்கும் என்று பம்பாய் மார்க்கர் கோல்ட் ஸ்டீன் கம்பெனியார் தங்கள் டெண்டரில் குறிப்பிட்டிருக்தார்கள். ஸ்டோர்ஸ் இலாக்கா மூலம் வாங்கினால் தான் இந்த குறைந்த விலை கிடைக்கும் என்றும் குறிப்பிட்டிருந்தார்கள்.

நேரடியாகவோ, ஸ்டோர்ஸ் இலாக்கா மூலமாகவோ, இந்த கம்பெனியிடமிருந்து பல்புகளை வாங்கலாமென்று கமிஷனர் சிபார்சு செய்திருந்தார். ஆனால், 1034 டிசம்பர் 14உ கூடிய ஒர்க்ஸ் கமிட்டி நேராகவே இந்த கம்பெனியிடமிருந்து பல்புகளை வாங்குவதென்று தீர்மானித்தது. 1935 ஜனவரி 25-ந் தேதி கூடிய நிதி கமிட்டி இதை அங்கீகரித்தது. இதன் பிரகாரம் அந்த கம்பெனிக்காரர்கள் நேராக பல்புகள் சப்ளை செய்தார்கள். அவர்களுக்கு ரூ. 18,75?-4-3 கொடுக்கப்பட்டது. ஸ்டோர்ஸ் இலாக்கா மூலம் வாங்கியிருந்தால் ரூ. 18261-1-10 தான் ஆயிருக்கும். இந்தத்தவறு கமிஷனருக்கு எடுத்துக்காட்டப்பட்டது. ஸ்டோர்ஸ் இலாக்காவுக்கு முன் பணம் டெபாஸிட் கட்ட வேண்டுமாதலால், கார்ப்பரேஷனுக்கு வட்டி நஷ்டமேற்படுமே யென்று நேராக வாங்கியதாக கமிஷனர் பதிலளித்தார். ஆனால் இம்பீரியல் பாங்கிலிருக்கும் கார்ப்பரேஷன் பணத்தில் நடைமுதல் கணக்குக்கு வட்டி கிடையாது. ஆகவே, இந்த வித்தியாசமான ரூ. 491-2-5ம் கார்ப்பரேஷனுக்கு நஷ்டம்தான்.

கார்ப்பரேஷன் பணத்திற்கு வட்டி கிடையாதென்ற விஷயம் தங்களுக்குத் தெரியாதென்பது மற்றொரு வாதம்.

நிர்வாக அதிகாரிகளின் சிபார்சுகளை ரிஜிஸ்தர் செய்வதற்கு மாத்திரம் நிரந்தரக் கமிட்டிகள் இல்லை. எல்லா விஷயங்களையும் பரிசீலனை செய்யவேண்டியது அவர்கள் கடமை.

கார்ப்பரேஷனின் பணத்திற்கு பாதுகாப்பாளர்களான நிரந்தரக் கமிட்டி மெம்பர்களுக்கு அது சம்பந்தமான ஏற்பாடுகள் தெரியாதென்றால் அவர்கள் தங்கள் கடமைகளை அறியாதவர்களென்று தான் சொல்ல வேண்டும்.

ஆகவே கார்ப்பரேஷனுக்கு ஏற்பட்ட நஷ்டமான ரூ. 491-2-5ம் பின்கண்ட 12 மெம்பர்களிட மிருந்தும் வசூலிக்கப்பட வேண்டும்.

ராவ்சாகிப் கச்சாபிகேச முதலியார், குமாரராஜா முத்தையா செட்டியார், ஸ்ரீமான்கள் எம். சுந்தரம்நாயுடு, ஜி. ஜானகிராம்செட்டி, பி. நடேசன், வி. பார்த்தசாரதி நாயக்கர், பஷீர் அஹமது ஸய்யீத், கே. ஸ்ரீராமுலு நாயுடு, எம். தாமோதரம் நாயுடு, ஆர். மதனகோபால நாயுடு, கே. வெங்கிடசாமி நாயுடு, திவான் பகதூர் கோபதி நாராயணசாமி செட்டி.

## நகரம் பூராவும் யுத்த விமானிகள்

ரோம், (தபால்)

கிடோனியா என்னும் பட்டணத்தில் சகலருக்கும் விமானப் பயிற்சி அளிக்கப்பட்டிருக்கிறது. யுத்த காலங்களில் இவர்களனைவரும் போர் முனைகளுக்கு அனுப்பப்படுவர், முஸோலினியின் நெடுநாளைய ஏற்பாடு இப்பொழுது அமுலுக்கு வந்துவிட்டது. கிடோனியா பட்டணம் இரு கூறுகப் பிரிந்திருப்பது. ஒரு பகுதி பூராவும் ராணுவஸ்தர் சேர்ந்திருக்கிறார்கள். மற்றப் பகுதியில் இப்பொழுது விமானிகள் வாசம். இவர்களெல்லோருக்கும் வசதிகள் அளிக்கப்பட்டுள்ளன.



## துப்பாக்கி லைசென்ஸ்கள்

### தேசீய இயக்கத்தில் ஈடுபட்டவருக்கும் உரிமை

சென்னை, நவ 24—

கவர்ன்மெண்டு ஹோம் டிபார்ட்மெண்ட் அறிக்கையின் சாரம்:—

சென்ற சில வருஷங்களாக வருஷா வருஷம் இம்மாகாணத்தில் லைசென்ஸ் பெற்ற துப்பாக்கிகளின் தொகை குறைந்து கொண்டே வந்திருக்கிறது. காட்டு மிருகங்களினின்றும் பாதுகாத்துக் கொள்வதற்குக் கண்டிப்பாக அவசியமிருக்கும் பிராந்தியங்களில் இம்மாதிரி துப்பாக்கிகளின் தொகை குறைந்து வருவது உசிதமல்ல என்று கவர்ன்மெண்டார் கருதுகின்றனர். துப்பாக்கிகளைப் பத்திரமாக வைத்துக்கொள்வதிலும், உபயோகிப்பதிலும் மனுதார் அலட்சியமாக விடாமலிருப்பாரா அல்லது அவர் தமது லைசென்ஸை துர்விநியோகப்படுத்தாமலிருப்பாரா என்ற விஷயத்தை முக்கியமாகக்கொண்டு ஜில்லா மாஜிஸ்திரேட்டுகள் மனுக்களைப் பரிசீலிக்க வேண்டும். லைசென்ஸ் பெற்ற ஆயுதங்களின் தொகை வரையறையில்லாமல் பெருகுவது உசிதமல்ல; இத்தகைய ஆயுதங்களை வைத்துக் கொள்ளுவதற்கான அவசியத்தையும் மனுதார்கள் தங்கள் லைசென்ஸைத் துர்விநியோகம் செய்யாமலும், புறக்கணிக்காமலு மிருப்பார்களா என்பவைதான். மனுதார் நேரகவோ அல்லது மறைமுகமாகவோ ஒத்துழையாமை இயக்கத்திலோ அல்லது சட்ட மறுப்பு இயக்கத்திலோ பங்கெடுத்துக்கொண்டவர் என்ற விஷயத்தைக்கொண்டு அவருக்கு லைசென்ஸை மறுக்கக்கூடாது.

1878-ம் வருஷத்திய ஆயுதச்சட்டப் பிரகாரம் ஆயுதங்கள் முதலியவற்றை வைத்துக் கொள்ள லைசென்ஸ் பெற்றிருந்து பிறகு மேற்படி இயக்கங்களின் காலத்தில் லைசென்ஸ்கள் பிடுங்கப்பட்டவர்கள் இப்பொழுது விரும்பினால் மறுபடியும் லைசென்ஸுகளுக்குத் தாராளமாக மனுச்செய்து கொள்ளலாம்.

## மஞ்சுகோவுக்கு

### ஜெர்மன் கடன் உதவி 350 லக்ஷம்

பெர்லின், நவ. 17—

ஆட்டோ ஒல்பு என்ற ஜெர்மன் உருக்கு கம்பெனி மஞ்சுகோ மத்திய பாங்குக்கு கடனுதவி செய்வதென்ற ஒப்பந்தம் ஜெர்மன், மஞ்சுகோ சர்க்கார்களால் ஊர்ஜிதம் செய்யப்பட்டது. ஜெர்மன் சாக்குகளை வாங்குவதற்காக மஞ்சுகோவுக்கு 350 லக்ஷம் பொன் கடனுதவி செய்யப்படும்.

## ஜப்பான் சூழ்ச்சி!

### சீன அநாதைகளுக்கு ஆயிரக்கணக்கில் பணவுதவி

ஷாங்கை நவ 17—

நன்டோ பகுதியிலுள்ள 250000 சீனர்களில் லக்ஷம்பேர் திக்கற்றவர்களாய் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். ஜப்பானிய தரைப்படை சேனாபதியின் உதாரணத்தை பின்பற்றி கடற்படை சேனாபதி ஹாஸிகவா மேற்படி அநாதைகளின் கஷ்டத்தை நிவாரணம் செய்ய 10000 டாலர் நன்கொடை அளித்துவிட்டார். (சீன சர்க்காருக்கு விரோதமாக சீன மக்கள் கிளம்பவேண்டுமென்ற வஞ்சனையின் அடியாகப் பிறந்திருக்கிறது இந்த தர்மசிந்தனை!)

## செட்டியார் திருமணம்

மலேயாவிலுள்ள தாமுட்டைச் சேர்ந்த திரு ஏ. எஸ். பி. சுப்பையா செட்டியாருக்கும், தெலுக்கான்ஸனைச் சேர்ந்த திரு கே. என். ஓ. எல். வி. வெள்ளையப்ப செட்டியாரின் மூன்றாவது புத்திரி செளபாக்கியவதி விசாலாக்ஷி அம்மாளுக்கும் விவாகம் நிறைவேறியது.

A. M. Muthu & Co., Tobacco.

ஏ. எம். முத்து & கோ ★ சிவபுரி புகையிலை ★

Register No. 785.

நமது கம்பெனியில் தயாரிக்கும்

**பவுன் & சூரியன் மார்க்**

அசல் சிவபுரி புகையிலையையே 1 அணு, அரையணு, காலணு பாக்கெட்டாக தயாரிக்கிறோம். வியாபாரிகளுக்கு தகுந்த லாபமுண்டு.

விபரங்களுக்கு எழுதித் தெரிந்து கொள்ளவும்.

N. ஆறுமுகம் பிள்ளை,
காரைக்குடி.

---

இந்தியாவில் சிறந்தது!!

MEENAKSHI SUNDARA SWAMYGAL. Best Quality

**புதுக்கோட்டை சித்தர்**

# சந்தனாதித் தைலம்.

பெரியடின் விலை ரூ 2. அரைடின்விலை ரூ. 1

கிடைக்குமிடம்:—

லக்ஷ்மி விலாஸ், கல்லுக்கட்டி வடகரை, காரைக்குடி.
T. N. சொக்கலிங்கம் பிள்ளை, 17, வடக்கு சித்திரை வீதி, மதுரை.
கமர்ஷியல் கார்பொரேஷன், சைனா பஜார், திருச்சி,
ராம. செ. ராம. 78, முகல்ரோடு, ரெங்கோன்.
மீனாக்ஷி ஸ்டோர், 83. முகல்ரோடு, ரெங்கோன்,
வ. நா. வ. 67, மார்க்கட்டு ஸ்டிரீட், சிங்கப்பூர்.
து. வே. பழ. 121, பண்டு குரோஸ் ஸ்டிரீட், மலாக்கா,
தே. கா.வீர. 19 ஜாலன் மகாராணி, மூவார்.
சா. ராம. 68, பெல்பீல்டு ஸ்டிரீட், ஈப்போ.
அ.மு. முத்தய்யா செட்டியார், 97, சீ ஸ்டிரீட், கொளும்பு.
சரஸ்வதி விலாஸ் கதர் ஸ்டோர், 101, பினங்கு ஸ்டிரீட், பினங்கு.

எல்லா இடங்களுக்கும் ஏஜண்டுகள் தேவை. கேட்லாக் இனம்.

M. S. Meenakshisundara Swamy,
Sidhar Medical Hall, Pudukotah State, (S. India.)

---

**மூல வியாதியை பூரணமும் குணப்படுத்துகிறது.**

# ஹாடென்ஸா

The ideal remedy „Hadensa" Berlin – Friedenau

எப்பேர்ப்பட்ட மூலமாயினும்சரி இரத்தம்வடிதலை நிறுத்தி குணப்படுத்துகிறது. உலகப் பிரசித்தமான டாக்டர்களாலும் ஆஸ்பத்திரிகளிலும் உபயோகிக்கப் பட்டு சிபார்சு செய்யப்பட்டது. மூலம் முதலிய வியாதிகட்கு சிறந்ததும், வெகு சீக்கிரத்தில் குணப்படுத்துவதுமானமருந்து இது ஒன்றுதான். ஆபரேஷன் தேவை இல்லை

உங்களூர் மருந்து வியாபாரிகளிடமிருந்து வாங்குங்கள்.

---

டாக்டர் ஹீல்ஸ்

**ஹீலிங் டிராப்ஸ்.**

வெள்ளை, வெட்டை, நீர்ச்சுருக்கு, நீரடைப்பு, நீர்த்துவார எரிச்சல் இன்னும் சகலவிதமான நீர் வியாதிகளுக்கும் கைகண்ட மருந்து. இன்னும் நாள்பட்ட மூத்திர வியாதிகளையும், ரத்தவெட்டையையும், நீர்ப்பை,நீர்த்வாரம் முதலியவைகளிலுள்ள புண்களையும் மின்னல்போல் போக்கடிக்கும்.

பாட்டில் விலை ரூபா 2—0—0.

சோல் ஏஜண்டுகள்— N. R. சாமி அண் கோ.,
இங்கிலீஷ் மருந்து ஷாப், வடக்குச்சித்திரை வீதி, மதுரை.

---

DR. K. AZUMA JAPANESE DENTAL SURGEON பல்

**சகலவிதமான பல் வியாதிகட்கும்**

புதுக்கோட்டை பிரபல ஜப்பானிய

**பல் வைத்தியர் டாக்டர் கே. அஸுமா அவர்களிடம் வாருங்கள்.**

பொதுஜன சவுகரியத்தை முன்னிட்டு, எங்கள் ஆபீஸ் மதராஸிலிருந்து புதுக்கோட்டைக்கு மாற்றப்பட்டிருக்கிறது.

---

16—4—37ந்-தேதி முதல் 50 ரூ. கிரயமுள்ள மருந்தை ரூ. 15-க்கு குறைக்கப்பட்டிருக்கிறது.

வைத்திய சாஸ்திரத்தில் மகா நிபுணர் முப்புவை கண்டுபிடித்தவர். அநேக டாக்டர்களால் தீராதெனக் கைவிடப்பட்ட கொடிய ரோகங்களை எல்லாம் தீர்த்து உலகமெங்கும் நல்ல புகழும் கீர்த்தியும் பெற்றவர் தீராத ரோகங்களை எல்லாம் தீர்க்கும் வல்லமையுடையவர்

பழனி வைத்திய ஆசிரியர் ஆர். எம். கே.

# வேலுசாமி பிள்ளை

நீங்கள் அநேக மருந்துகளை சாப்பிட்டும் உங்கள் வியாதி தீராமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறீர்களா? அப்படியானால் வைத்திய ஆசிரியர்

**பழனி ஆர். எம். கே. வேலுசாமி பிள்ளைக்கு எழுதுங்கள்.**

உங்கள் வியாதி எதுவாயிருந்தாலும் சரி நிவர்த்திக்க வல்லமையுடையவர்!!

முப்பு அண்டு மகா மூலிகைகளால் தயாரிக்கப்பட்ட

**பழனி ஆர். எம். கே.**

# தாம்பர பஸ்பம்

**சாப்பிடுங்கள்.**

உங்கள் கவலை தீர்ந்துவிடும். சகல வியாதிகளுக்கும் கைகண்டமருந்து. திமிர் குஷ்டம் தீர்ந்துவிட்டது. மதமதப்பு மாறி சொரணை உண்டாகிவிட்டது. ஆறாத ரணம், குழிப்புண்களெல்லாம் ஆறிவிட்டது.

கிரந்தி, மேகப் பத்துகளெல்லாம் படல் படலாய் உதிர்ந்துவிட்டது. இருமல், இளைப்பு பறந்துவிட்டது. வெள்ளைக் குஷ்டம் தீர்ந்துவிட்டது.

பத்தாயிரக்கணக்கான குஷ்டம், திமிர், மதமதப்பு, குறைநோய் குழிப்புண், ரணங்களும், விஷகடியால் பத்துவிழுந்து தடிப்புகளுண்டாகி குஷ்டமாகி ஆறாத ரணங்களும் தீர்ந்துவிட்டது. குன்மம், நீரழிவு, காசம், க்ஷயம், ஈளை, இருமல், சூதக வயிற்றுவலி, மலடு, வெள்ளை, வெட்டை, கடுப்பு, எரிச்சல், வியாதிகளும் வெட்டை முத்தி கால் குடைச்சல், கைகால் முடக்கு கிரந்தி, மேகநீர் மேகப்பத்துகளும் கண்டமாலை, அண்ட வீக்கம் வலி, மூலம் பவுத்திரம் முதலியசகல வியாதிகளும் இதில் தீர்ந்துவிட்டது.

அரிகிரந்தி, சொரிகிரந்தி, செங்கிரந்தி, கருங்கிரந்தி, கருங்குஷ்டம் கருமேகமும் தீர்ந்துவிட்டது. சொரி, மேகஊரல், அரிப்பு, செம் மேகத்தடிப்பும், கைகால் சொரணையற்று திமிர்த்து மதமதப்பேறி காது, மூக்கு உதடு பெருத்து, பாதமெல்லாம் வெடித்து குழிப்புண் விழுந்து, புரையோடிப் புழுத்து, நாற்றமெடுத்து, சீழாய்க் கொட்டி விரல்கள் அழுகி இத்து இத்து விழுந்து குழகுழவென்று அழுகிப்போன குஷ்டரோகங்களெல்லாம் சொஸ்தமாகி விட்டது.

அநேக மருந்துகள் சாப்பிட்டும் தீராத ரோகங்களை எல்லாம் தீர்த்து அடங்காத தாதுபுஷ்டி புத்திர சந்தானம் உண்டாக்கி இருக்கிறது.

| | | |
|---|---|---|
| 50 நாள் தாம்ப்ரபஸ்பம் அநுபானம் குஷ்ட சூரணம் | விலை ரூ. | 15—0—0 |
| 25 நாள் | ஷை | 7—8—0 |

ஏழைகளுக்குப் பாதி விலை கிடையாது.

பிரபுக்களுக்கு கிரயம் வேறு. 25 நாள் மருந்திற்கு குறைந்து கொடுக்கப்படமாட்டாது.

குழகுழவென்று அழுகிப்போன குஷ்டரோகங்களெல்லாம் சொஸ்தமாகிவிட்டதற்கு அடையாளமாக ஆயிரக்கணக்கான சர்ட்டிபிகேட்டுகள் அடங்கிய நற்சாக்ஷி புஸ்தகத்தைப் பாருங்கள். பேப்பரைக் குறிப்பிட்டு எழுதினால் ஷை புக்கும் கேட்லாக்கும் இனமாய் அனுப்பப்படும்.

வைத்திய ஆசிரியர்,

**ஆர். எம். கே. வேலுசாமி,**

சித்த வைத்தியசாலை, பழனி. S. I.

தந்திவிலாசம்:— வேலுசாமி, பழனி.

பிராஞ்சு:— 146, புரசவாக்கம் ஹைரோடு, சென்னை.

Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd., at the Kumaran Power Press, Karaikudi. (S. INDIA)

